# பதினறு வருஷம்!
# பாரிஜாதம்!!



கே. மதுபாலா




பூரண விற்பனை உரிமையாளர்கள்:

C. R. தேவராஜ் (பிரைவேட்) லிமி

10, அப்பா கார்டன்ஸ் ரோடு, சென்னை - 1

போன்: 61437 :: தபால் பெட்டி

முதற்பதிப்பு: அக்டோபர்–1956



குபேரா பிரசுரம்

விலை 8 அணா

...ல் வரும் பெயர்கள், சம்பவங்கள் எல்லாம்
... யாரையும் குறிப்பிட்டுக் காட்டவோ,
... சம்பவங்களைச் சுட்டிக் காட்டவோ
... இந்த நாவலின் நோக்கமல்ல.

... & Published by Kubera Printers (Private) Ltd.,
...Buildings, 21, Sunkurama Chetty Street, Madras-1.

# பதினாறு வருஷம்! பாரிஜாதம்!!

பகல் இரண்டு மணி; அப்பொழுதுதான் சாப் பாட்டை முடித்துக் கொண்டு மாடியில் உட்கார்ந் திருந்தேன். ஏனோ தெரியவில்லை பசியிருந்தும் திருப்தி கரமாக உணவருந்த முடியவில்லை. தவிர இரண்டு நாட்களாக தொண்டையில் ஏதோ அடைத்துக் கொண் டிருப்பது போன்ற ஒரு வேதனை உணர்ச்சி; எதையும் விழுங்கும்போது ஒரு பிரயாசை...சற்று அசௌகர் யம். இதற்கென்று அன்று காலை டாக்டர் கிருஷ்ணஸ் வாமியின் ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தேன். பதினைந்து நிமிஷம் வாயைத் திறந்து கொண்டேயிருக்க வைத்து விட்டார். தொண்டையில் மருந்து போட்டார். அந்த நெடி இன்னும் மூச்சுக் காற்றில் 'குப்'பென்று வீசிக் கொண்டிருந்தது.

நான் ஒரு 'வுட்பைன்' ஸிகரெட்டைப் பற்ற வைத்தேன். புகையை அனுபவித்து உறிஞ்சினேன்— ஈஸிசேரில் சுகமாகச் சாய்ந்து கொண்டு எதிரிலிருந்த குட்டையான மேஜைமீது கால்களை நீட்டினேன். அந்த ஓய்வை அனுமதிக்க விரும்பாத டெலிபோன்

மூலையிலிருந்து கிணுகிணுத்தது. எழுந்து சென்று ரிஸீவரை எடுத்தேன்.

"ஹலோ...பரசுராம் பேசுகிறேன்" என்றேன்.

"ப்ரதர், இன்ஸ்பெக்டர் நாயர் பேசுகிறேன். டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தீர்களாமே!" என்றது ஒரு குரல் மறுமுனையிலிருந்து.

"ஆமாம் பாய். யார் சொன்னது உங்களுக்கு?"

"ஊரெல்லாம் சுற்றிவரும் ஒரு குருவி சொல்லிற்று. அது போகட்டும். நான் உங்களுடன் உடனே பேசவேண்டும். இப்போதே புறப்பட்டு நேரே இங்கேவந்து விடுங்கள்."

"இங்கேயென்று ஒரு இடமா?"

"அதுதான் ப்ரதர் இது."

"ஓ...புரிந்தது. இதுதானே?" என்றேன் விடாமல்.

"எது?"—இப்போது நாயர் கேள்வி கேட்கலாயிற்று, பாவம்.

"எங்கே நான் வரவேண்டும் என்பதை நீங்கள் சொன்னால் அதுவே இது, எது, எல்லாவற்றிற்கும் விடை" என்றேன்:

"பெரிய விளையாட்டுக் காட்டி வீட்டீர்களே ப்ரதர், நான் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரியிலிருந்து பேசுகிறேன். நீங்கள் உடனே இங்கு வாருங்கள்."

"அங்கே என்ன செய்கிறீர்கள் பாய்? ஏன் உங்களுக்கும் தொண்டையில் ஏதாவது அடைத்துக் கொண்டிருக்கிறதா? மருந்து போட்டுக் கொள்ளத் துணைக்கு நான்தேவையா?"

அவர் தந்த பதில் இந்த நகைச்சுவைப் பேச்சுக்கு முற்றுப் புள்ளி வைத்தது. "ப்ரதர், டாக்டர் கிருஷ்ணஸ்வாமி இறந்துவிட்டார்."

"என்ன? இறந்து விட்டாரா?"—போனுக்குள் கூச்சலிட்டேன்.

"அதிலும் சாதாரண சாவில்லை ப்ரதர்...கொலை செய்யப்பட்டாரா அல்லது தற்கொலை செய்து கொண்டாரா என்பதுதான் தீர்மானமாகவில்லை..."

ரிஸீவரை வைத்துவிட்டு உடனே அடுத்த அறைக்குச் சென்று உடைமாற்றிக் கொண்டேன். ஸூட், பூட்ஸ் சகிதம் வெளிவந்து மாடிப்படிகளை இரண்டே எட்டில் தாவிக் கடந்தேன்.

கூடத்தில் பாயில் படுத்திருந்த கிருஷ்ணையா என்னவோ கேட்டான், ஈன ஸ்வரத்தில். நான் செவிடாகி யிருந்தேன். என் காதுகளில் 'டாக்டர் கிருஷ்ணஸ்வாமி இறந்துவிட்டார்' என்ற ஒரே வாக்கியம் தான் திரும்பத்திரும்ப ஒலித்துக் கொண்டிருந்தது. கூடத்திலிருந்து 'ஷெட்'டுக்குப் போனேன். என் லாம்ப்ரெட்டாவை வெளியே தள்ளிக் கொண்டு வந்தேன். அடுத்த சில விநாடிகளில் லாம்ப்ரெட்டா பாதையை விழுங்கிக் கொண்டு டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்கு விரைந்தது.

டாக்டர் கிருஷ்ணஸ்வாமி காது—மூக்கு—தொண்டை வைத்திய நிபுணர். முக்கியமான இந்த மூன்று உறுப்புக்களிலும் மனிதகுலத்திற்கு வரும் நோய்கள் அவருக்கு பிரம்மாண்டமான மூன்றடுக்கு மாளிகையைக் கட்டிக் கொடுத்து விட்டன. பல லட்சம் சம்பாதித்து விட்டார்.

ஆஸ்பத்திரி வாயிலில் லாம்ப்ரெட்டாவிலிருந்து இறங்கினேன். வந்து-செல்வோர் தங்கும் விஸிட்டர்கள் அறையில் அடிவைத்தேன். காலையில் என் முறை வந்து டாக்டர் கூப்பிட்டனுப்பும்வரை அதே அறையில் தான் காத்திருந்தேன். விசாலமான அறை. பத்துப் பன்னிரெண்டுபேர் வசதியாக அமருவதற்கேற்ப ஸோபாக்களும் நாற்காலிகளும் வனப்புடன் போடப்பட்டிருந்தன.

இப்போது அறை காலியாயிருந்தது. ஒரு ஸிகரெட்டை எடுத்துப் பற்றவைத்தேன். சுந்தரம் அப்போதுதான் இடது பக்கத்துத் தாழ்வாரத்திலிருந்து வந்தான். என்னைப் பார்த்ததுமே எல்லோரும் மேலே காத்திருப்பதாகக் கூறி லிப்ஃட் கதவைத் திறந்தான். மறந்து விட்டேனே, சுந்தரம்தான் அங்கு லிப்ஃடை இயக்குபவன். லிப்ஃடுக்குள் நுழைந்தேன், இரண்டாவது மாடியில் நின்றதும் இறங்கி டாக்டர் கிருஷ்ணஸ்வாமி அறைக்கு நேரே போனேன்.

அறை அலங்கோலமாயிருந்தது. என் தலை தென்பட்டதும் இன்ஸ்பெக்டர் நாயர் விரைந்து வந்து என் இரு கரங்களையும் பற்றிக் கொண்டார். பாவம், அவர் கை என் ஸிகரெட்மேல் பட்டுவிட்டது. சுட்டிருக்கும் சுரீரென்று. இருவருமாக, சாமான்கள் வைக்கும் அறைபோலிருந்த அடுத்த அறைக்குப் போனோம்.

டாக்டரின் உடல் தரையில் கிடந்தது. கழுத்தின் இடது புறத்தில் ஒரு கத்தி செருகியிருந்தது. அது சத்திர சிகிச்சைகளில் பயன்படுத்தும் கத்தி.

இறந்தவரின் முகத்தைப் பார்த்தேன். அவர் காலையில் உயிருடன் உலவியதற்கும் இப்போது இறந்து கிடப்பதற்கும் இடையில் ஏதும் மாறுதல் அவர் முகத்தில் புலனாகவில்லை. கோபம், பயம், வெறுப்பு எத்தகைய உணர்ச்சியும் அதில் தேங்கியிருக்கவில்லை. ஈர்க்குச்சியில் பஞ்சைச் சுற்றி மருந்தில் தோய்த்து காலையில் என் தொண்டையில் மருந்தைப் போடும் போது அவர் பேசியதெல்லாம் என் நினைவுக்கு வந்தது. இவ்வளவு திடீரென்று அவர் இறந்து போவாரென்று யாரும் எதிர் பார்த்திருக்கமுடியாது.

இன்ஸ்பெக்டர் நாயர் பக்கம் திரும்பினேன். இருவரும் மீண்டும் முன்னறைக்கு வந்தோம்.

சுவரில் ஒரு பெரிய கண்ணுடி. அதற்கெதிரில் ஒரு சுழலும் நாற்காலி. அதில்தான் வாயை நாலு அங்குலம் அகலத் திறந்து கொண்டு காலையில் பதினைந்து நிமிஷம் உட்கார்ந்திருந்தேன். சில ரத்தத் துளிகள் சுழல் நாற்காலியின் கீழ் தரையில் தென்பட்டன... ஆனால் ஈரப்பசையின் பளபளப்பு இல்லை, யாரோ துடைத்ததுபோல் மங்கியிருந்தன.

"ப்ரதர், காலையில் எத்தனை மணிக்கு இங்கே வந்தீர்கள்?" என்றார் இன்ஸ்பெக்டர் நாயர்.

"ஏன்? நான்தான் டாக்டரைக் கொன்று விட்டேன் என்று சந்தேகிக்கிறீர்களா?" என்றேன் சிரித்த வண்ணம்.

நாயர் பதில்தரவில்லை. உடனுக்குடனே சூடும் சிரிப்புமாகப் பதில்தரும் ஆற்றலை அவருக்கு இறைவன் அளிக்கவில்லை.

"காலையில் 11-25 க்கு வந்தேன். கீழே விஸிட்டர்கள் அறையில் சில நிமிஷம் காத்திருந்தேன். 11-30 க்கு சுந்தரம் என்னை லிப்ஃடில் இங்கு அழைத்து வந்தான். கால்மணி நேரம் இந்த அறையில் இதே நாற்காலியில் உட்கார்ந்திருந்தேன். 11-45 க்கு இங்கிருந்து வெளியேறி, இடது பக்கத்திலுள்ள படிக்கட்டு வழியாய் இறங்கிப் போனேன்."

"டாக்டர் தற்கொலைதான் செய்து கொண்டு விட்டாரென்று அஞ்சுகிறேன், ப்ரதர். ஆமாம், நீங்கள் இங்கிருந்தபோது அவர் தாராளமாக—அதாவது சகஜமாகப் பேசினரா?"

"நாயர் பாய், ரொம்பவும் தாராளமாகப் பேசினர். தவிர அவர் மட்டுமே பேசினர். பதில் பேச முடியாமல் நான் வாயைத் திறந்து கொண்டு உட்கார்ந்திருந்தேன். தற்கொலை செய்து கொண்டிருக்க இடமில்லை என்பதே என் கருத்து," என்றேன்.

அறையின் நாலு மூலைகளையும் ஒருமுறை துழாவிப் பார்த்தேன். மூன்று போலீஸ் ஜவான்கள் இங்குமங்கும் 'ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும் வாடியிருக்கும் கொக்கு'கள் போல் நின்று கொண்டிருந்தார்கள். நாயர் பக்கம் திரும்பி "இந்த மாளிகையில் எந்தப் பகுதியில் டாக்டர் வசித்து வந்தார்?" என்று விசாரித்தேன்.

"மூன்றும் மாடியில் தனது சகோதரியுடன் வசித்து வந்தார். பத்து நிமிஷங்களுக்கு முன்தான் அந்த அம்மாள் மேலே போனார்கள்," என்று பதில் தந்தார் நாயர்.

அறைக்குள்ளிருந்து வெளிவந்து படியேறி மூன்றும் மாடிக்குப் போகலானேன். இன்ஸ்பெக்டர் பின் தொடர்ந்தார். இருவரும் கவர்ச்சிகரமான முன் அறையில் நுழைந்தோம். முப்பத்தைந்து வயது மதிப்பிடத்தக்க ஒரு பெண்மணி கண்ணீர்க் கறைபடிந்த முகத்தோடு ஸோபாவில் அமர்ந்திருந்தாள். அருகில் சென்று கூர்ந்து நோக்கினேன்.

"உங்கள் சகோதரரைப் பற்றி நீங்கள் சொல்லக்கூடியதெல்லாம் நான் கேட்க விரும்புகிறேன்," என்றேன்.

"சொல்வதற்கிருந்ததையெல்லாம் இன்ஸ்பெக்டரிடம் சொல்லிவிட்டேன். அண்ணா நல்லவர், கெட்ட பழக்கங்கள் எதுவுமே கிடையாது. நோயாளிகளை நன்கு கவனிப்பார். நிறைய வேலை செய்வார். வேலை முடிந்ததும் நேரே இங்கே வந்து விடுவார். அதிகம் வெளியில் போகமாட்டார். படிப்பதில் பிரியம் கொண்டவர்."

"சமீபத்தில் அவருக்கு ஏதாவது தொல்லைகள், சிரமங்கள் நேரிட்டிருந்ததா?"

"ஊஹூம்...ஒரு தொல்லையும் இல்லை. ஏகப்பட்ட பணம். பத்து வருஷத்திற்கு முன் மனைவி இறந்து

விட்டாள். மறுபடி மணந்து கொள்ளவில்லை. குழந்தை குட்டியும் கிடையாது."

"எவ்வளவு காலமாக நீங்கள் அவருடன் வசிக்கிறீர்கள் ?"

"ஐந்து வருஷங்களுக்கு முன் ஒரு ரயில் விபத்தில் என் கணவர் இறந்தார். எனக்கும் குழந்தை இல்லை. தனியே மாமனுர் வீட்டில் வசித்து வந்தேன். அண்ணு தன்னோடு வந்து விடும்படி அழைத்தார். வந்து விட்டேன். அதுமுதல் இங்கேதான் வசிக்கிறேன்."

"உங்கள் சகோதரர் இறந்து விட்டதால் அவருடைய சொத்துக்கள் யாருக்குச் சேரும் ?"

"சொத்து பூராவும் அண்ணு தானுகச் சேர்த்தது தான். போனவருஷம் ஓர் உயில் எழுதினுர். அதன் படி எனக்குத் தான் எல்லாம் கிடைக்கிறது. ஆனுல் நான் ப்ரமீளாவுக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டிருக்கிறுர்."

நாயரை ஒருமுறை நமுட்டுச் சிரிப்புடன் பார்த்து விட்டு "ப்ரமீளாவா, யார் அது ?" என்றேன்.

"கடந்த நாலு வருஷங்களாக ப்ரமீளா இங்கு அண்ணுவுக்கு உதவியாக வேலை பார்க்கிறுள். தங்கமான பெண். அதனுல்தான் அவளுக்கு ஐயாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டுமென்று அண்ணு குறித்தார்."

"கல்யாணமானவளா ?"

"இல்லை...சமீபத்தில் தான் தக்ஷிணுமூர்த்தி என்பவனைக் கல்யாணம் செய்து கொள்ளத் தீர்மானித்தாள். நல்லவேளை இன்னும் கல்யாணமாகவில்லை."

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் ? கல்யாணம் செய்து கொள்வது கெட்டவேளையில் தானு ?"

"அதற்கில்லை. அண்ணுவுக்கு தக்ஷிணுமூர்த்தியைப் பிடிக்கவேயில்லை. வேலைவெட்டி இல்லாமல் ஊரைச் சுற்றுகிறுன். அவனைக் கல்யாணம் செய்து

கொண்டால் வாழ்க்கையே வீணாகிவிடுமென்று அண்ணா ப்ரமீளாவிடம் அடிக்கடி கூறுவார்.''

"ப்ரமீளா அவரது கருத்தை அங்கீகரித்தாளா?"

"ப்ரமீளா சூதுவாது அறியாதவள். எஜமான் வார்த்தைக்குக் கட்டுப்படும் நாய்க் குட்டிபோல அவள் எப்படியோ தக்ஷிணா மூர்த்தியிடம் வசப்பட்டு விட்டாள். அவளது அன்பும் மனநிலையும் மாறவில்லை என்று தான் சொல்லவேண்டும்.''

"காதலுக்குத்தான் கண்ணில்லையே...உம், இன்று ப்ரமீளா ஆஸ்பத்திரிக்கு வந்தாளோ?"

"இல்லை. செங்கல்பட்டில் யாரோ அத்தைக்கு உடம்பு சரியில்லையாம். டெலிபோன் மூலம் அண்ணாவிடம் லீவ் கேட்டுக் கொண்டாள் இன்று ஒரு நாளைக்கு.''

"உடனே டாக்டர் சம்மதித்து விட்டார், இல்லையா?"

"அண்ணாவுக்கு எரிச்சல்தான். முக்கியமாக இன்று பத்துப் பேரைப் பார்க்க வேண்டியிருந்தது. சலிப்புடன் தான் சரியென்றார்.''

நான் ஒரு ஸிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தேன். சிந்தனை சுழன்றது. யாரோ வரும் அடிஅரவம் வெளி வராந்தாவில் கேட்டது. சில விநாடிகளில் கவலை தோய்ந்த முகத்துடன் ஒரு யுவதி உள்ளே வந்தாள். வயது இருபதிருக்கும்.

அவளைப் பார்த்ததும் டாக்டரின் சகோதரி வாய் விட்டு அழலானாள்.

"இப்படி ஒரு விபரீதம் நடக்குமென்று யார்தான் எண்ணியது?...ஹூம், ஒருவேளை இன்று நான் லீவ் போடாமல் வந்திருந்தால் இந்த விபத்து நடந்திருக் காதோ என்னவோ,'' என்று அங்கலாய்த்தாள் அந்த யுவதி.

அவள்தான் ப்ரமீளா என்பது தெற்றெனப் புலப் பட்டது. புகையை உறிஞ்சியவாறே அவளை உற்று நோக்கினேன். பிறகு அருகில் சென்று, "உங்களுடன் முக்கிய விஷயமாகப் பேச விரும்புகிறேன். இரண்டா வது மாடியில் டாக்டரின் 'கன்ஸல்டிங்' அறைக்கு வாருங்கள்," என்று சொல்லிவிட்டு அங்கிருந்து வெளி யேறினேன். நாயரும் ப்ரமீளாவும் பின் தொடர்ந்தனர்.

டாக்டரின் 'கன்ஸல்டிங்' அறையில் புகுந்தோம். அடுத்த அறையில் போலீஸ் டாக்டர், கிருஷ்ணஸ்வாமி யின் உடலைப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார்.

அறையின் ஒரு மூலைக்கு ப்ரமீளாவை அழைத் துச் சென்று "ஏன் இன்று லீவ் போட்டீர்கள் ?" என்று கேட்டேன்.

"செங்கல்பட்டிலுள்ள என் அத்தைக்கு உடம்பு சரியில்லையென்று தந்தி வந்தது. டாக்டருக்கு டெலி போன் செய்துவிட்டு செங்கல்பட்டுக்குச் சென்றேன். ஆனால் உண்மையில் என் அத்தை உடம்புக்கு ஒரு அசௌகர்யமும் இல்லை என்பது அங்கு போனபின் தெரிந்தது. யாரோ வேண்டுமென்றே பொய்த் தந்தி கொடுத்து என்னை ஏமாற்றி விட்டார்கள்...கோபமும் வருத்தமும் வந்தன. உடனேயே அங்கிருந்து திரும்பி விட்டேன். ஆஸ்பத்திரிக்குள் அடிவைத்ததும் இந்த விபரீதச் செய்தியைக் கேட்டு மேலே ஓடி வந்தேன்"— ப்ரமீளா 'கணீ'ரென்று தயக்கமில்லாமல் பேசினாள்.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமி இறந்தநாள் பார்த்து யாரோ அப்படித் தந்தி கொடுத்ததும் நீங்கள் லீவ் எடுத்ததும் ஆச்சரியமாக இல்லையா ?" என்றேன். விஷமத்தனமான கேள்விதான்.

"எனக்கும் அப்படித்தான் தோன்றியது."

"தந்தி வந்ததுமேயா ?"—பதிலை ஆவலோடு பார்த்தேன்.

ப்ரமீளா அசந்து போகவில்லை. "தந்தி வந்ததும் அவ்விதம் எப்படி நினைக்கமுடியும். தந்தி பொய் என்பது செங்கல்பட்டில் தெரிந்து, இங்கு திரும்பி வந்து டாக்டர் இறந்து விட்டதை அறிந்ததும்தான் ஆச்சர்யம் உண்டாயிற்று."

"தக்ஷிணாமூர்த்தி தந்தி கொடுத்திருப்பாரோ?"—'வெடுக்'கென்று கேட்டேன்.

"ஏன் அவர் தரவேண்டும்? அதுபோல் என்னிடம் அவர் விளையாட மாட்டார்"—ப்ரமீளாவின் குரலில் உறுதி தொனித்தது.

"அப்படியானால், செங்கல்பட்டில் உங்களுக்கு அத்தையிருப்பது தெரிந்து இப்படித் தந்தி கொடுத்திருக்கக்கூடிய வேறு யாரும் உண்டா?"

"நான் அறிந்த மட்டில் இல்லை."

"தக்ஷிணாமூர்த்தி இன்று இங்கு வந்தாரா?"

"இன்று வரவேண்டியவர்கள் பெயரை யெல்லாம் நான் நேற்றே எழுதிவைத்து விட்டேன்" என்றாள் ப்ரமீளா. அலமாரிக்குச் சென்று ஒரு நோட்டுப் புத்தகத்தை எடுத்து வந்தாள். ஒரு பக்கத்தைப் பிரித்து என்னிடம் காட்டினாள். நோயாளிகளின் பெயர்கள், அவர்கள் வரவேண்டிய நேரம் எல்லாம் குறிக்கப்பட்டிருந்தது. அந்த அட்டவணையை என் டயரியில் பிரதி எடுத்துக் கொண்டேன்.

| நேரம் | பெயர் |
|---|---|
| காலை 9-30 | மிஸஸ். டிஸௌஸா |
| ,, 10-00 | ஆர். ரங்கராவ் |
| ,, 10-30 | எஸ். ரங்கநாதன் |
| ,, 11-00 | பி. சுப்பிரமணியன் |
| ,, 11-30 | துப்பறியும் பரசுராம் |
| பகல் 12-00 | ராவ்சாஹிப் வி. எஸ். கோவிந்தன் |
| ,, 12-20 | ஸ்ரீமதி பாரிஜாதம் |
| ,, 12-30 | ஆர். சொக்கநாதன் |
| ,, 1-00 | ஸ்ரீமதி பாஞ்சாலி சுவாமிநாதன் |

டயரியில் குறித்துக் கொண்ட ஜாபிதாவைச் சில நிமிஷங்கள் பரிசீலித்தேன். யோசிக்கலானேன்.

காலையில் 11-45 வரை நான் டாக்டர் கிருஷ்ண ஸ்வாமி அறையிலிருந்தேன். எனவே 11-45-க்குப் பிறகுதான் டாக்டர் தற்கொலை செய்து கொண்டிருக்க வேண்டும் அல்லது கொலை செய்யப்பட்டிருக்க வேண்டும். அந்த ஜாபிதாவில் என் பெயருக்கு அப்புறமுள்ள எல்லோரையும் நான் அவசியம் சந்தித்தாக வேண்டும். என்னருகில் நின்று கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் நாயர் தாமும் அந்தப் பெயர்ப் பட்டியலை ப்ரமீளாவின் நோட்டுப் புத்தகத்திலிருந்து ஆரம்பப்பள்ளி மாண வனைப் போலக் 'காப்பி' செய்துகொண்டிருந்தார்.

யோசித்த வண்ணம் நான் ப்ரமீளாவின் பக்கம் திரும்பினேன்.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமியிடம் தக்ஷிணாமூர்த்தி மனக் கசப்பு வைத்திருந்தாரா?"

"அவரை (அதாவது தக்ஷிணாமூர்த்தியை) மணந்து கொள்வது உசிதமில்லையென்று டாக்டர் என்னிடம் பல தடவைகள் கூறியிருக்கிறார். இதை அவர் அறிவார். ஆனாலும் மனக்கசப்பு எதுவுமிருக்கக் காரணமில்லை என்றே நான் சொல்வேன். அவரை எப்படியும் மணந்து கொள்ள நான் உடன்பட்டபின் டாக்டரின் அபிப்பிரா யத்தை அவர் பொருட்படுத்துவானேன்?"

ப்ரமீளா சொல்வது உண்மையாயிருக்கலாம். அவள் புத்திசாலியாய்த் தோன்றினாள். டாக்டர் கிருஷ்ண ஸ்வாமியின் இதயத்தில் புகுந்துவிட்ட தனிமைக்கு இவள் ஒரு மாற்றாக இருந்திருப்பாள்.

"டாக்டர் தற்கொலை செய்து கொண்டிருப்பார் என்று நம்புகிறீர்களா?"

"இல்லை. நான் நம்பவில்லை."

"யாரேனும் கொலை செய்திருக்கக் கூடுமோ?"

"அப்படித்தானே யிருக்கவேண்டும். வேறுவழி?"

கெட்டிக்காரி; என்னையே மடக்கினுள்.

"அதுதான் யார் செய்திருக்கக் கூடுமென்று கேட்டேன்"—மீனுக்காகத் தூண்டில் போட்டேன்.

"அதை நான் எப்படிச் சொல்வது? டாக்டர் மிக நல்லவர். மற்றவர்கள் விஷயங்களில் தலையிடமாட்டார்." மீன் வடிவக் கண்ணழகி என் கேள்வியில் ஏமாறவில்லை.

"ஏன், உங்கள் கல்யாண விஷயத்தில் தலையிட்டிருக்கிருரே!" என்றேன் 'சடக்'கென்று.

"அது தலையீடென்று நீங்கள் எப்படிச் சொல்ல முடியும். ஒரு தந்தை தன் பெண் விஷயத்தில் தமக்கு நல்லதென்று தோன்றுவதைச் சொன்னுல் அது தலையீடு ஆகுமா? அது போல்த்தான் அவரது ஆலோசனைகளை நான் கருதுகிறேன்."

அவள் கண்களுக்குள் ஊடுருவி நோக்கிக் கேட்டேன். "பின் அவருக்கு யாரேனும் எதிரிகள் இருந்திருக்க வேண்டும், இல்லையா?"

"நான் பதில் சொல்ல முடியாத கேள்வி இது. ஆனுலும் ஒன்று சொல்வேன். மூளையோ இதயமோ உள்ள யாரும் அவரிடம் பகைமை பாராட்டி யிருக்க முடியாது."—உணர்ச்சிகரமாகப் பேசினுள் ப்ரமீளா. அதில் உண்மை ஒளிர்வதாகவே எனக்குத் தோன்றியது.

"சரி.....ஸ்ரீமதி பாரிஜாதமும், ஸ்ரீ ஆர். சொக்கநாதன் அவர்களும் வசிக்குமிடம் தங்களுக்குத் தெரியுமா?" என்று விசாரித்தேன்.

"பாரிஜாதம் மீனுக்ஷி ஹோட்டலில் வசிக்கிருள்; அவர் ஹோட்டல் காவேரியில் தங்கியிருக்கிருர்."

"இவர்கள் இதற்கு முன் இங்கே வந்திருக்கிருர்களா?"

"ஸ்ரீமதி பாரிஜாதம் இரண்டு தடவை வந்திருக்கிருள்; சொக்கநாதன் வந்தது இதுவே முதல் தடவை.

அதே சமயம், போலீஸ் டாக்டர், சவத்தைப் பரிசோதித்து முடித்து எங்களிடம் வந்தார்.

"என்ன சொல்கிறீர்கள், டாக்டர்?" என்றார் நாயர்.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமி பகல் 12 மணிக்கும் 1 மணிக்கும் இடையில் இறந்திருக்கிறார் என்று மட்டுமே இப்பொழுது சொல்ல இயலும். சத்திர சிகிச்சையில் பயன்படும் கூரான கத்தியால் தாக்கப்பட்டிருக்கிறார். ஸ்தலத்திலேயே மரணம் சம்பவித்திருக்கிறது. ஆகவே இரைந்து கூவியிருக்க வழியில்லை. மற்ற விவரங்கள்—நுணுக்கங்கள்—எல்லாம் சவத்தை முறைப்படி பரிசோதனை செய்த பின்னரே சொல்வது சாத்தியம்" என்று விடையளித்தார் போலீஸ் டாக்டர்.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமி தனது வலக்கையில் கத்தியைப் பிடித்துக்கொண்டு கழுத்தின் இடப்புறத்தில் இதேபோல குத்திக் கொண்டிருக்க முடியுமா?"

"அதுவும் முடியும்."

சிறிது நேரம் இன்ஸ்பெக்டர் நாயர் சுடர்விடும் கண்களால் என்னை நோக்கினார். போலீஸ் டாக்டர் இதற்கிடையில் விடைபெற்றுச் சென்றார். இன்ஸ்பெக்டர் நாயரும் நானும் மீண்டும் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் உடல் கிடந்த அறைக்குள் நுழைந்தோம். விரல் அடையாளங்களைக் கண்டுபிடிக்கும் நிபுணர் கத்தியின் கைப்பிடியைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். அவர் பெயர் நிரஞ்சன். "இந்தப் பிடியிலிருக்கும் விரல் அடையாளங்கள் எல்லாம் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் விரல் அடையாளங்கள் தாம்" என்றார் அவர்.

நான் திரும்பி முன்னறைக்கு வந்தேன். நாயர் பின் தொடர்ந்தார். "நாயர் பாய், நான் வெளியில் போகிறேன். சில விஷயங்களைப்பற்றி நான் விசாரித்தாக வேண்டும். அப்புறம் வந்து போலீஸ் ஸ்டேஷனில் சந்திக்கிறேன்" என்றேன்.

அறை முழுவதும் ஒருமுறை நோட்டம் விட்டேன். ப்ரமீளாவைக் காணும். மேலே போயிருக்கலாமென்று எண்ணி படியேறி மூன்றும் மாடிக்குப் போனேன். அங்கு நான் எதிர்பார்த்தபடியே ப்ரமீளா இருந்தாள். அவளும் டாக்டரின் சகோதரியும் ஒருவருக்கொருவர் ஆறுதல் கூறிக்கொண்டிருந்தார்கள்.

டாக்டரின் சகோதரியிடம் "இன்று காலை எத்தனை மணிக்கு டாக்டர் கீழே சென்றார்?" என்று கேட்டேன்.

"9 மணிக்கு."

"மறுபடி மேலே வந்தாரா?"

"11-45-க்குப்பின் ஒரு முறை வந்தார். ஒரு கப் ஓவல்டின் குடித்துவிட்டு மறுபடி கீழே போனார்."

எனக்குள் சிந்தித்த வண்ணம் நான் நின்றேன். நான் போனதும் காலையில் அவர் மேலே போயிருப்பார். ஓவல்டின் குடித்துவிட்டு 12-மணிக்குள் மறுபடி கீழே சென்றிருப்பார். ஆகவே டாக்டர் கிருஷ்ணஸ்வாமி கொலை செய்யப் பட்டிருந்தால் 12-மணிக்குப்பின் தான் கொலை நிகழ்ந்திருக்க வேண்டும். போலீஸ் டாக்டரும் அப்படித்தானே கூறினார். நான் ப்ரமீளாவைப் பார்த்தேன்.

"இன்று வந்து போன நோயாளிகளை நன்றாகத் தெரியுமா?"

"எத்தனையோ பேர்கள் இங்கு வந்து போகிறார்கள். டாக்டருக்குத் தெரிவது போல அவ்வளவு நன்றாக எனக்கு எல்லோரையும் தெரியாது."

அதற்குமேல் ஏதும் கேட்காமல் நான் படிகளில் இறங்கி இரண்டாம் மாடிக்கு வந்தேன். லிப்டில் நுழைந்தேன். சுந்தரம் கீழே அழைத்துச் சென்றான். தாழ்வாரத்தில் இறங்கியதும் ஒரு ரூபாய் நோட்டை எடுத்து சுந்தரத்திடம் கொடுத்தேன்.

"சுந்தரம்,...இன்று காலை இங்கு வந்த நோயாளி களையெல்லாம் அடையாளம் கண்டு கொள்வாயா?"

"கண்டுகொள்வேன், ஸார். டாக்டர் காலையில் ஒரு ஜாபிதா கொடுத்தார். அந்த வரிசைப்படியே நான் ஒவ்வொருவராக அழைத்துச் சென்றேன். ஒருவர் போனதும் அடுத்தவரை அனுப்புவதற்காக டாக்டர் மின்சார மணியை அமுக்குவார்."

"யாரெல்லாம் இன்று வந்தார்கள், சொல்!"

சுந்தரம் சற்று நினைத்துப் பார்த்துக் கொண்டு கூறினான். "9 மணிக்கு ஒரு அம்மா வந்தாள். ஈர்க்குச்சி போல ஒடிந்து விழும்படியாக இருந்தாள். இங்கேயே விஸிட்டர் ரூமில் உட்கார்ந்து கொண்டாள். சரியாக 9-30-க்கு டாக்டர் மின்சார மணியை அழுத்தினார். அந்த அம்மாளை லிப்டில் இரண்டாம் மாடிக்கு அழைத்துச் சென்று விட்டுவந்தேன். அதன்பின் மூன்று கனவான்கள் வந்தார்கள். அப்புறம் நீங்கள் வந்தீர்கள்."

"ஏன் சுந்தரம், என்னையும் சேர்த்து நாலு கனவான் கள் என்று சொல்லக் கூடாதா? நான் கனவான் இல்லையா?" என்று கேட்டுச் சிரித்தேன்.

"மன்னிக்கணும், ஸார்" என்றான் சுந்தரம். 12-மணிக்கு ராவ் சாஹிப் கோவிந்தன் வந்தார். அவரையும் லிப்டில் இரண்டாம் மாடிக்கு ஏற்றிச் சென்றேன். அடுத்தாற்போல ஒரு அம்மணி; அப்புறம் ஒரு கனவான்."

"பெயர் என்ன?"

"ஜாபிதாப்படி அவர் சொக்கநாதன் என்பவரா யிருக்க வேண்டும், சுருட்டைத்தலை. ஸ்டாலின் மீசை, சற்று தடித்தவர், அவரை அதற்கு முன் நான் பார்த்த தில்லை. அவரையும் லிப்டில் அழைத்துச் சென் றேன்."

"அப்போது வேறு எத்தனை விஸிட்டர்கள் அறையில் காத்திருந்தார்கள்?"

"ஒரே ஒரு அம்மாள் மட்டும்தான். டாக்டர் சரியாக 1 மணிக்கு வரச் சொல்லியிருந்தாராம். மணி 1–30 ஆகியும் மின்சார மணி ஒலிக்கவில்லை. என்மீது அந்த அம்மாள் கோபம் கொண்டு 'டாக்டர் என்ன சொல்கிறார், பார்த்துவா' என்று அதட்டினார்கள். நானும் பயந்து மேலே போய் டாக்டர் அறைக்கு முன் நின்றேன். அங்கு ஒரே அமைதியாக இருந்தது. டாக்டர் ஒரு வேளை அந்த அம்மாளை வரச் சொல்லியிருப்பதை மறந்து விட்டாரோ என்று நினைத்து உள்ளே போனேன். டாக்டரைக் காணோம். அதை ஒட்டிய அறையில் எட்டிப் பார்த்தேன். டாக்டர் தரையில் கிடப்பதைப் பார்த்து திடுக்கிட்டு கிட்டத்தில் போனேன். கழுத்தில் கத்தி தெரிந்தது. உடனே இறைந்து கூவிக் கொண்டே வெளியில் வந்து விட்டேன். என் கூச்சலைக் கேட்டு மேலேயிருந்து டாக்டர் வீட்டு அம்மாவும், வேலைக்காரி லக்ஷ்மியும் ஓடி வந்தார்கள். அப்புறம் தான் போலீஸுக்குப் போன் செய்தோம்."

"டாக்டரைப் பார்த்தபின் இரண்டாம் மாடியிலிருந்து இறங்கி வருபவர்கள் எல்லோரையும் நீ பார்த்தாயா?"

"சில பேரைப் பார்த்தேன். ஆனால் நான் யாரையும் லிப்ஃடில் மேலே ஏற்றிச் செல்லும் பொழுது கீழே இறங்கிச் செல்பவர்களை நான் பார்க்க முடியாதே!"

"ராவ்சாஹிப் கோவிந்தன் இறங்கி வந்து வெளியே போவதைப் பார்த்தாயா?"

"இல்லை ஸார். ஆனால் அவருக்குப் பின் சென்ற அம்மாள், அந்த மீசைக்கார ஆசாமி இருவரையும் பாாத்தேன், அவர்கள் இறங்கி வந்து வெளியே போகும்போது."

"லக்ஷ்மி உள்ளே இருக்கிறாளா?"

"மேலே இருப்பாள், ஸார்."

"அவளை இங்கே கூட்டி வா."

சுந்தரம் லிப்ஃடில் மேலே போனான். கவலை படிந்த முகமுடைய ஒரு பெண்மணியை அழைத்து வந்தான். நான் விஸிட்டர்களுக்கான அறையின் ஒரு மூலைக்கு அவளை அழைத்துச் சென்று "லக்ஷ்மி, உன் எஜமான், டாக்டர் தற்கொலை செய்து கொண்டிருப்பாரா ?" என்றேன்.

"எனக்குத் தெரியாதுங்க சாமி."

"அவர் இறந்து போய் விட்டார் என்று அறிந்ததும் உனக்கு ஆச்சர்யமாக இல்லையா ?"

"ஆமாமுங்க...ரொம்ப வருத்தமா இருந்துச்சுங்க."

"ஐயாவை யாராவது கொலை செய்திருக்கக் கூடும், இல்லையா ?"

காரணமென்னவோ தெரியவில்லை, லக்ஷ்மி உடனே பதில் தரவில்லை. உதடுகள் துடித்தன. வார்த்தைகள் வெளிவரவில்லை.

"லக்ஷ்மி! உனக்கு என்னவோ தெரியும். நீ ஒழிக்கப் பார்க்கிறாய்", என்றேன்.

"இல்லை சாமி. எதையும் ஒழிக்கலீங்க", என்றாள் கெஞ்சும் குரலில்.

அவள் முகத்தைப் பார்த்தேன். எதையோ ஒழிக்கிறாள் என்பதை உணர்ந்தேன். லிப்ஃடினிடம் விரைந்து சென்று சுந்தரத்தின் கண்களில் பார்வையை ஊன்றி "உண்மையைச் சொல், சுந்தரம்! ஜாபிதாவில் இல்லாத யாரும் காலையில் இங்கு வந்தார்களா?" என்று கடிந்து கேட்டேன்.

"ஆமாம்!...தக்ஷிணாமூர்த்தி ப்ரமீளாவைத் தேடிக் கொண்டு வந்தார். நான், 'ப்ரமீளா இன்று வரவில்லை, லீவ்' என்று சொன்னேன். இங்கேயே சற்று

நேரம் நின்றுர். அப்புறம் என்ன செய்தாரோ தெரியாது. வேறு ஒருவர் ஒன்றரை மணி சுமாருக்கு வந்தார். அவரைப் பார்க்கவே பயமாயிருந்தது. சங்கிலித் தொடர்போல் ஒன்றன்பின் ஒன்ருக சிகரெட் பிடித்தார். எதுவுமே சொல்லாமல் அப்புறம் வெளியே போய்விட்டார். இவர்கள் இரண்டு பேரையும் தவிர வேறு யாரும் வரவே யில்லை.''

"அவர் பெயரென்ன, தெரியுமா?'' என்றேன்.

"தெரியும் ஸார். கொஞ்சம் நூதனமான பெயர். சிந்தாமணி கேல்கர்.''

உடனே நான் சென்று என் லாம்ப்ரெட்டாவைக் கிளப்பினேன், ராவ் சாஹிப் கோவிந்தன் வீட்டை நோக்கி விரைந்தது லாம்ப்ரெட்டா.

★ ★ ★

## 2

'காம்பவுண்ட் கேட்'டில் நான் நுழையும்போது

என்னைத் தடுத்து நிறுத்த முயன்றுன் காவல் நின்ற கூர்க்கா. ஆத்திரமடைந்தேன். ஒரு கையால் லாம்ப் ரெட்டாவைச் சமாளித்துக் கொண்டு மற்ருெரு கையால் அவனை உதறித் தள்ளினேன். ஆறடி அப்பால் புல் தரையில் போய் விழுந்தான் அவன்.

உள்ளே சென்ற நான் லாம்ப்ரெட்டாவை 'போர்டிகோ'வில் நிறுத்திவிட்டு, வராந்தாவில் அடியெடுத்து வைத்தேன். ஏதோ விசாரிக்க விரும்புவது போல் ஒரு சேவகன் என்னைப் பார்த்தான். ஒரு வேளை கூர்க்காவின் கதியைப் பார்த்திருப்பானே என்னவோ, எதுவும் பேசவில்லை.

"இந்தக் கார்டைக் கொண்டுபோய் மிஸ்டர் கோவிந்தனிடம் கொடு'' என்றேன், பையிலிருந்து ஒரு 'விஸிட்டிங் கார்டை' எடுத்து அவனிடம் கொடுத்த வண்ணம்.

இரண்டு நிமிஷங்கள் சென்றன. அவன் உள்ளே யிருந்து வந்து என்னை ஓர் அறைக்கு அழைத்துச் சென்றான்.

சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த ராவ் சாஹிப் என்னைப் பார்த்ததும் 'வாருங்கள்' என்று வரவேற்றார். எதிரில் இருந்த ஒரு நாற்காலியைச் சுட்டிக் காட்டினார். உட்கார்ந்தேன்.

"உங்கள் பெயரை நான் கேள்விப் பட்டிருக்கிறேன். உண்மையைக் கண்டுபிடித்து நீதியை நிலை நிறுத்தவதற்காகப் பாடுபடும் உங்களுக்கெல்லாம் சமூகம் கடமைப்பட்டிருக்கிறது" என்று உபசாரமாகக் கூறினார்.

டாக்டர் கிருஷ்ணஸ்வாமி பற்றிப் பேச ஆரம்பித்தேன் ரத்தினச் சுருக்கமாய். புகழ்ச்சியுரைகள் என் உச்சியில் பனிக்கட்டியை வைக்க வில்லை.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமி....ஆமாம்....ஐயோ, பாவம். இறந்து விட்டாராமே...அதுவும் சந்தேகப் படும்படியான சந்தர்ப்பங்கள். ஹும்...இப்போது தான் டாக்டரின் சகோதரி டெலிபோனில் தெரிவித்தாள்."

நான் ஒரு ஸிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு அவரைக் குடைந் தெடுப்பது போல ஒரு முறை நோக்கினேன்.

"நீங்கள் இன்று எத்தனை மணிக்கு அங்கு சென்றீர்கள்?" என்று கேட்டேன்,

"12-00 மணிக்கு முன் சுமார் ஐந்து நிமிஷம், கீழே விஸிட்டர்கள் அறையில் உட்கார்ந்திருந்தேன். பிறகு அங்கேயுள்ள சுந்தரம் என்னை லிப்ஃடில் மேலே அழைத்துச் சென்றான். சுமார் இருபது நிமிஷங்கள் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் அறையில் தங்கியிருந்தேன். அப்புறம் வந்துவிட்டேன்."

"கீழே எப்படி வந்தீர்கள்? படிக்கட்டு இறங்கி யா, லிப்ஃடிலேயா?"

"படிக்கட்டு வழியாகத்தான்".

"நீங்கள் அங்கு இருந்தபோது டாக்டர் உங்களி டம் ஏதாவது பேசினுரா?"

"என் பல் ரொம்பவும் வலித்தது. வலியைக் குறைக்க மருந்து தடவினுர். அப்போது சில கதை கள் பேசினுர். கேட்டுக் கொண்டே உட்கார்ந்திருந் தேன்."

"ராவ் சாஹிப்...டாக்டர் தற்கொலை செய்து கொண்டிருப்பார் என்று நாம் எண்ணுவதற்கு ஹேது வாக அவர் எதாவது பேசினுரா?"

"அதுபற்றி நான் தீர்மானமாகச் சொல்வதற்கில்லை. சிலர் தமது சிக்கல்களை எண்ணி எண்ணித் தமக்குள் ளேயே மறுவிக் கொண்டிருப்பார்கள். நமக்கு வெளி யில் தெரியாது. ஏதோ எரிமலைபோல் திடீரென்று குமுறித் தற்கொலை செய்து கொண்டு விடுவதும் உண்டு."

"ஆகவே நீங்கள் வெளியில் போகும்போது அவர் உயிருடன் இருந்தார், இல்லையா?"

"நன்ருக!...எனக்குப்பின் யாரோ ஒரு அம்மாள் டாக்டர் அறையில் நுழைவதை நான் பார்த்தேன். நான் படியிறங்கும் தருவாயில் அவள் லிப்ஃடிலிருந்து இறங்கி டாக்டர் அறைக்குள் போனுள்."

"அந்த அம்மாளின் பெயர் தெரியுமா, உங்க ளுக்கு?"

"தெரியும். ஆனுல் மனத்திலிருக்கிறது. இப் போது சொல்ல நினைவு வரவில்லை. ஒருபுது மாதிரிப் பெயர் அது."

"ஒருவேளை ஸ்ரீமதி பாரிஜாதமோ அது?"— மெதுவாக வார்த்தைகளை விட்டேன், அவர் முகத்தைக் கூர்ந்து கவனித்தவாறே.

ஒரு மாறுதலும் இல்லை அவர் முகத்தில். "ஆமாம்... அதுதான் அந்த அம்மாளின் பெயர்" என்று ஆமோதித்தார்.

"அந்த அம்மாளை உங்களுக்கு நன்ருகத் தெரியும் போலிருக்கிறது."

"அறிமுகம் உண்டு. ஆனல் அதிகப் பழக்கமில்லை. பழக்கமிருந்திருந்தால் நஷ்டம்தான்."

"ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் ?"

"டாக்டர் ஆஸ்பத்திரியில் தான் ஒரே ஒரு முறை முதலில் பார்த்தேன். அதற்கப்புறம் ஏதோ காரணம் சொல்லிக் கொண்டு அந்த அம்மணி நேரே இங்கு வந்து விட்டாள். சேவாசங்கம் ஒன்று நடத்துகிருர்களாம். நூறு ரூபாய் என்னிடம் வாங்கிக் கொண்டு தான் விட்டாள்."

"ஸ்ரீமதி பாரிஜாதத்திற்குப் பின் யாரோ சொக்கநாதன் டாக்டரின் அறைக்குச் சென்றதாகக் கேள்விப்பட்டேன். அவரையும் தங்களுக்குத் தெரியுமோ ?"

"இல்லை...தெரியாது."

"சற்று பருமனுக இருப்பாராம்...சுருட்டையான கேசம். ஸ்டாலின் மீசை என்று அடையாளம் சொன்ஞர்கள்."

"நான் வெளியே போகும்போது விஸிட்டர்கள் அறையில் இப்படி ஒருவர் ஸோபாவில் அமர்ந்திருப்பதைப் பார்த்தேன். ஆனல் அவர் யார், என்ன பெயர் எதுவும் எனக்குத் தெரியாது."

"அப்படியானல் இதற்குமேல் நீங்கள் ஒன்றும் சொல்வதற்கில்லை."

"எனக்குத் தெரிந்ததை நீங்கள் அறிய விரும்பினல் எப்போதும் அதைச் சொல்லத் தடையில்லை."

ஸிகரெட் புகையை உறிஞ்சி நுகர்ந்தவாறே அறையின் நாலா புறமும் பார்வையைப் படரவிட்டேன். மொத்தத்தில் அது அரண்மனை போன்ற மாளிகை. அமைதி குடி கொண்டிருந்தது.

நான் அவரைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். பல கம்பெனிகளை வெற்றிகரமாக நடத்துகிறார் ராவ்சாஹிப், லட்சாதிபதி. இத்தகைய வர்த்தகச் சீமானின் வீட்டில் வருவோரும் போவோருமாக சந்தடி இல்லாமல் சாந்தம் நிலவியது எனக்கு வியப்பைத் தந்தது. மக்கள் பொதுவாக நினைப்பது போல் பணம் அவ்வளவு சத்தம் போடாதுபோலும்!

"உங்களுடன் இங்கு யார் யார் வசிக்கிறார்கள்?" என்று விசாரித்தேன்.

"வேலையாட்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள்."

"அதைக் கேட்கவில்லை. மனைவி, குழந்தைகள், வேறு உறவினர்கள்?......"

நான் நிறுத்தினேன். அவர் முகம் வெளிறியது, துயரம் துளும்பும் குரலில் அவர் பேசலானார்: "நான் தொழிற் துறையில் ஊரார் பிரமிக்கும்படி வெற்றியடைந்திருக்கிறேன். ஆனால் குடும்ப வாழ்வில் அந்த வெற்றி எனக்குக் கிட்டவில்லை. உலக நீதியே அதுதான் போலிருக்கிறது. என் அருமை மனைவி சாவித்திரி ஐந்து வருஷங்களுக்கு முன் க்ஷய ரோகத்தால் இறந்து போனது உங்களுக்குத் தெரியுமோ தெரியாதோ! நாங்கள் கடைசிவரையில் புதுக் காதலர்கள் போலவே வாழ்ந்தோம். இப்போதெல்லாம் இளைஞர்கள் உலகில் கனகாம்பரக் காதல்தானே காண்கிறோம். கவர்ச்சியிருக்கிறது; நறுமணமில்லை. ஆனால் நாங்கள்......ஹூம். நினைவு சுடுகிறது. இதயம் மண் பாண்டத்தைப்போல் உடைந்து விட்டது!" திணறினார் அவர்.

ஒரு நிமிஷம் நானும் பேசவில்லை. காதலெனும் ஜோதிமயமான உலகக் காட்சியில் மூழ்கியது போல் அவரைப் பார்த்தேன். பார்வதியின் நினைவு என்னுள் மூண்டது.

"நான் இங்கு வேறு காரியமாக...அதுவும் ஒரு கோரசம்பவத்தைத் தொடர்ந்து வந்திருக்கிறேன். இருந்தாலும் என்போன்ற இளைஞர்கள் இதுபோன்ற காதல் வாழ்க்கையின் கந்தர்வ உலகம் பற்றி அறிய விரும்புவது சகஜமில்லையா?" என்றேன்.

ராவ்சாஹிப் கோவிந்தன் கண்ணைக் கவரும் பிளாஸ்டிக் பெட்டியிலிருந்து ஒரு உறையூர் சுருட்டை எடுத்துப் பற்றவைத்தார். உணர்ச்சி படிந்த குரலில் மறுபடி துவங்கினர்: "இதெல்லாம் பன்னிரெண்டு வருஷங்களுக்கு முன் நடந்தது. அப்போது எனக்கு சுமார் 33 வயது. வேலை இல்லை. பல இடங்களிலும் தேடியலைந்தேன். என் புத்தி கூர்மையைப் பாராட்டு வார்கள்; அதே மூச்சில் வேலை காலி இல்லையே என்று வருந்தி விரட்டுவார்கள். கடைசியில் அதிர்ஷ்ட வச மாக ராஜாராம் செட்டி கம்பெனிக்குப் போனேன். செட்டியார் பெரிய ஏற்றுமதி வியாபாரி. சென்னையி லிருந்து பல பொருள்களை வெளிநாடுகளுக்கு அனுப்பு வார். அவரைச் சந்தித்துப் பேச சந்தர்ப்பம் கிடைத் தது. அவருக்கு எப்படியோ என்மீது ஒரு பற்று தல் விழுந்தது. நான் புத்திசாலி என்று அவர் சொன்ன தாகப் பின்னர் அறிந்தபோது எனக்கு உண்மையி லேயே மகிழ்ச்சியாயிருந்தது. அங்கே டைப்பிஸ்டா கச் சேர்ந்தேன். ஆறுமாதங்களில் கம்பெனிக்குக் காரியதரிசி ஆகிவிட்டேன். சரியாக ஒரு வருஷம் கழித்துப் பார்த்தபோது அவருடைய ஆபீஸ் விவகாரங் கள், சொந்த விவகாரங்கள் எல்லாவற்றையும் நானே பூராவும் கவனித்து வந்தேன். தமது தள்ளாத வயதில் என்னை நம்பி எல்லா விஷயங்களையும் ஒப்படைத்து விட்டார். நானும் அவர் முகம் கோணமல் பொறுப்பு களை நிறைவேற்றி வந்தேன்."

கோவிந்தன் சற்று நிறுத்தினர். சில விநாடிகள் அந்த உயர்ந்த உறையூர் சுருட்டின் சுகந்தப் புகையை

அனுபவித்தார். மறுபடி கூறலானுர்: "இவ்வளவுக் கும் நான் அவர் வீட்டுக்கு அடிக்கடி போகமாட்டேன். எப்போதாவது தான் போவேன்...அதி முக்கியமான சமாச்சாரம் கலந்து பேசுவதற்கு இருந்தால். அவருடைய ஒரே பெண் சாவித்திரி. வயது இருபத்தைந் தைத் தாண்டியும் அதுவரை திருமண மாகவில்லை. அழகியல்ல. சற்று கறுப்புத்தான் நிறம். ஆனால் புத்தி சாதுர்யமானவள் என்பதைச் சில சந்திப்புகளில் கண்டு கொண்டேன். அந்த புத்தி கூர்மை என்னைக் கவர்ந்தது. எனக்காகக் காத்திருக்கவே அதுவரை கல்யாணமாகவில்லை என்றெண்ணினேன். நாளுக்கு நாள் எங்கள் நட்பு வளர்ந்தது.

"ஒருநாள் ஆபீஸிலிருந்த என்னை சாவித்திரி டெலி போனில் கூப்பிட்டு அவள் அப்பாவுக்கு உடம்பு சரியில்லை யென்றும் உடனே நான் புறப்பட்டு வர வேண்டுமென்றும் சொன்னுள்.

"அப்படியே போனேன். ராஜாராம் செட்டியார் ஒரு கட்டிலில் படுத்திருந்தார். அவரைப் பார்த்ததுமே 'சரி, இவருக்கு நீரும் நிழலும் இனி அதிகம் இல்லை' என்று தீர்மானித்து விட்டேன்.

"சாவித்திரியும் நானும் எதிர் எதிராய் கட்டிலின் இருபக்கங்களிலும் நின்றோம். அவருக்கு உயிர்ப் பிச்சை அளிக்குமாறு வேண்டாத தெய்வங் கள் கிடையாது. அவர் தலையைத் தூக்கிக் கண்களைத் திறந்தார். கண்களில் ஒரு பிரகாசம். அணையப் போகும் விளக்கல்லவா? இருவரையும் மாறிமாறிப் பார்த்தார். இருவர் வலக்கரத்தையும் தன் உள்ளங் கைக்குள் எடுத்து வைத்து ஒன்று சேர்த்தார். அடுத்த கணமே உலகத்துப் பாதையில் ஒரு காற்றடைத்த பை சுருங்கி விழுந்தது. என்னை வாழவைத்த ராஜாராம் தமது வாழ்வின் கடைசி மூச்சை விட்டுவிட்டார்."

வாழ்வின் அநித்யத்தைச் சுட்டிக் காட்டுவதுபோல் ஒலித்தது கோவிந்தன் குரல்.

"அப்புறம் என்ன...பொறுப்பு பூராவும் என்னுடையதாயிற்று. சாவித்திரியும் நானும் மணந்து கொண்டோம். எட்டுவருஷ காலம் யாரும் எட்டாத இன்ப வாழ்க்கை நடத்தினோம். ஆனால் விதி இந்த இன்பக் காவியத்திற்கு முற்றுப் புள்ளிவைக்க முனைந்தது. உலக நீதி என்னும் ஏட்டில் கலப்பில்லாத சந்தோஷத்திற்கு அதற்கு மேல் இடமில்லை."

ஏதோ நாடகத்தில் உணர்ச்சி மிகுந்த வசனங்கள் வருவதுபோல் பேசினார் ராவ்சாஹிப்.

"சாவித்திரியை எப்படியோ க்ஷயரோகம் பற்றிக் கொண்டது. அவள் ஐந்து வருஷங்களுக்கு முன் என்னைத் தனி மரமாக நிறுத்திவிட்டுப் போய்விட்டாள். எங்கள் அன்பில் கனிந்த கனியும் எதுவும் இல்லை. தனிமைதான் துணை. இருந்தாலும் என் மருமாள் ஒருத்தியை ஏதோ கூப்பிட்ட குரலுக்கு ஏன் என்று கேட்க வரவழைத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். ஹூம்—" என்று சூள் கொட்டினார் ராவ்சாஹிப்.

நான் நாற்காலியிலிருந்து எழுந்தேன். அவரது கரங்களைப்பற்றி ஆதுரத்தோடு குலுக்கினேன். விடைப் பெற்று வெளியேறி, 'போர்டிகோ'வில் நின்ற லாம்ப் ரெட்டாவைக் கிளப்பி, மெதுவாக 'கேட்'டுக்குப் போகலானேன். பாதி வழி கடந்திருப்பேன்.

திடீரென்று, இடது பக்கமிருந்த ஒரு மாமரத்தி லிருந்து "ஏ, ஸைக்கிள் வாலி!" என்ற விசித்திர அழைப்புக் கேட்டது.

லாம்ப்ரெட்டாவை நிறுத்தி, குரல் வந்த திசையைப் பார்த்தேன். பருவம் குலுங்கும் ஒரு பெண்—வயது பதினாறு பதினேழு இருக்கும்—மரத்திலிருந்து குதித்து விரைந்து வந்தாள். அவள் தரித்திருந்த உடையைப் பார்த்தபோது என்னால் சிரிப்பை அடக்க

முடியவில்லை. ஆண்களைப்போல் கோடு போட்ட முழுக்கை சட்டையும், முழு நிஜாரும் அணிந்திருந்தாள். இடுப்பில் ஒரு பெல்ட். குதிகால் உயரமான பாத ரட்சைகள். தலையில் ஒரு நாசூக்கான சிறு தொப்பி. கையில் ஒரு மணிப்பிரம்பு. மேலை நாட்டு சினிமாப்படம் ஒன்றிலிருந்து குதித்து வந்தது போன்ற கோமாளிக் கோலம்.

என்னை ஏளனமாகப் பார்த்து "நீர் யாரென்று தெரியும்," என்றாள்.

"அப்படியா......எங்கே பெயர் சொல்லு பார்க்க லாம்," என்றேன்.

"உன் பெயர் பரசுராம்......நீ துப்பறிபவன். பச்சோந்தி போல் மாறுவாய். அவன் இவன், அவள் இவள் எல்லோரையும் நிழல்போலப் பின் தொடர்ந்து ரகசியங்களைச் சேகரிப்பாய்" என்று வர்ணித்தாள் அந்த வனிதாமணி.

'நீ' என்று ஒருமையில் அவள் பேசியதுகூட எனக்குக் கோபமூட்டவில்லை. பொல்லாத இளம் பெண்!

"உன்னையும் நான் நிழல்போலப் பின் தொடர்ந்து உன் ரகசியங்களைக் கண்டுபிடித்து விடுவேன் என்று பயப்படுகிறாயல்லவா?" என்று கேட்டேன்.

"மண்ணாங்கட்டி" என்றாள். எனக்கே தூக்கி வாரிப்போட்டது. என்ன துடுக்கு!

"என் ரகசியங்களை உன்னைப்போன்ற ஊர்சுற்றி களால் கண்டுபிடிக்க முடியாது. அவை நெஞ்சின் ஆழத்தில் இருக்கும். நீ எதற்காக வந்து போகிறாய் சொல்லட்டுமா? என் காதலன் யாரென்று கண்டு பிடிக்குமாறு மாமா உன்னிடம் சொல்லியிருப்பார். யாராயிருந்தால் அவருக்கென்ன, உனக்கென்ன? இப்படி என் சொந்த விஷயத்தில் தலையிடுவது அநாவசியம்;

அநாகரீகம். யாரை நான் காதலிக்கிறேனென்று மே
லேயே சொல்கிறேனே, எனக்கு என்ன பயமா? அவர்
பெயர் சிந்தாமணி கேல்கர்.''

நான் சுவாரஸ்யம் கொண்டேன். ஆனால் வெளியில்
காட்டிக் கொள்ளவில்லை.

''லைலாவும் மஜ்னுவும் போல நாங்கள் ஒருவரை
யொருவர் காதலிக்கிறோம். மாமா கூடாதென்று தலை
கீழாக நின்றாலும் நான் கேல்கரையை மணந்து கொள்
வேன். தெரிந்ததா? இனி உனக்கு ஜோலியில்லை.
போகலாம். 'குட்பை' ''—என்று பொழிந்து நிறுத்
தினாள்.

எனக்குள் சிரித்துக்கொண்டே அவள் அருகில்
சென்று கையைப் பிடித்தேன். ''அம்மா, பெண்ணே...''
என்று ஆரம்பித்தேன்.

''நான் அம்மாவுமில்லை, பெண்ணுமில்லை! நான்
பாவாடைக் கட்டிக்கொண்டு மரப்பாச்சியா வைத்துக்
கொண்டிருக்கிறேன்? என்னை கூப்பிடுவதானால் 'நர்கீஸ்'
என்று பெயர் சொல்லிக் கூப்பிடு!'' என்றாள் அந்த
அரட்டை.

''நர்கீஸ், நீ நினைப்பது சரியில்லை. உன் காதலன்
யாரென்று கண்டுபிடிக்க ஒப்புக்கொள்வதற்காக நான்
மாமாவிடம் வரவில்லை. இன்று டாக்டர் கிருஷ்ண
ஸ்வாமி இறந்து விட்டாரல்லவா! அது சம்பந்தமாக...''.
நான் தொடர்வதற்குள் ''என்ன!......டாக்டர் போய்
விட்டாரா? யார் அவரைக் கொன்றது?'' என்று
வினவினாள் அந்தப் பெண்.

எனக்கு பரபரப்பு உண்டாயிற்று. ஏன் 'யார்
கொன்றது?' என்று எடுத்த எடுப்பிலேயே கேட்கிறாள்.
இயற்கை மரணமாக இவள் அதைக் கருதவேயில்லை
போலிருக்கிறது. காரணம் என்ன?

''நர்கீஸ், யார் கொன்றது என்று கண்டுபிடிக்கத்
தான் நான் அலைகிறேன். உனக்குத் தெரியுமா?'' என்று
கேட்டேன் மெதுவாக.

"எனக்கு எப்படித்தெரியும்?"—அவள் எச்சரிக்கையாகி விட்டாள்.

"சரி, போகட்டும். கேல்கர் எங்கு தங்குகிருர்?"

"லக்ஷ்மி ஹோட்டலில்."

"இங்கு அடிக்கடி வருவாரோ?"

"ஏன், அப்படி வருவது குற்றமோ?"

"சேச்சே......அதற்கில்லை. நீ நம்புவாயோ மாட்டாயோ, எனது லட்சியமே இப்படி மனப் பூர்வமாக நேசிக்கும் காதலர்கள் சந்தோஷமாகக் கல்யாணம் செய்துகொண்டு வாழ வேண்டுமென்பது தான்."

என் மந்திரம் பலித்தது.

"அப்படியானல், நீ நல்லவன்தான்......நீ ஏன் இதை மாமாவிடம் சொல்லி, அவர் புத்தியைச் சரி செய்யக் கூடாது?"

"அவருக்கு இந்த காதல் விஷயத்தில் இஷ்டமில்லையா?"

"ஹூம்...காதல் என்ருல் அர்த்தமே அவருக்குத் தெரியாதே...பணம் ஒன்றுதான் அவருக்குப் புரியும் பாஷை. இதயமே கிடையாது. மாமாவைப் போன்றவர்கள் எப்போதும் இருந்து வந்திருப்பதால்தான் லைலாக்களும் மஜ்னூக்களும், ரோமியோக்களும் ஜூலியட்களும் பலியாகவேண்டி நேருகிறது. என் மாமா லட்சாதிபதி என்பது உனக்குத் தெரியாதா? குழந்தைகள் கிடையாது. அதற்குப் பதில்தான் நான் இங்கு இருக்கிறேன். என்ருவது ஒரு நாள் அவர் இறந்து போகத்தானே செய்வார். அப்போது எல்லாப் பணமும் எனக்குக் கிடைக்கும். காதலர்களை ஒன்று சேர்ப்பதற்காக நான் ஒரு ஸ்தாபனமே ஆரம்பிப்பேன்."

நர்கீஸ்மீது மறுபடி ஒருமுறை நன்றி, அனுதாபம், பரிகாசம் மூன்றும் கலந்த பார்வையை வீசிவிட்டு நான் என் லாம்ப்ரெட்டாவில் ஏறினேன். லக்ஷ்மி ஹோட்டலை நோக்கி அது விரைந்தது.

## 3

லக்ஷ்மி ஹோட்டல் இரண்டாம் மாடியில் 20-ம் நம்பர் அறைக் கதவைத் தட்டினேன். ஓர் இளைஞன் கதவைத் திறந்தான். உயரமானவன்; அப்படியும் பருமனும் புலப்பட்டது. இருட்டில் நெருப்பைப்போல் 'தகதக' என்று மின்னுமே பூனையின் கண்கள், அது போன்ற கண்கள் அந்த இளைஞனுக்கு. திடீரென்று அவனைப் பார்த்தால் கொலைகாரன் என்றுதான் எண்ணத் தோன்றும். நானாக அவனைத் தாண்டிக்கொண்டே உள்ளே நுழைந்தேன்.

"யார் நீ? நான் நிற்பது தெரியவில்லை?" என்று கோபமாகக் கேட்டுக்கொண்டே என் 'கோட்' காலரைப் பற்றினான் அவன்.

எனக்குச் சினம் பொங்கி எழுந்தது. முஷ்டியை இறுக்கி மூடிக்கொண்டு ஒரு குத்து விட்டேன். கழுத்துக் கருகில் விழுந்தது குத்து, சம்மட்டி அடிபோல. தடுமாறிக் கீழே விழுந்தான். அவனையே விறைத்துப் பார்த்தவாறு நின்றேன்.

"பரசுராமிடம் இப்படி வீராப்பாய் நடப்பது, சட்டம் பேசுவதெல்லாம் அபாயகரமான செயல்கள், தம்பி. முன்பொருவன் தனது அறைக்குள் நான் நுழைவதைத் தடுக்க இதுபோல் முயன்றான். மூன்று மாதம் ஆஸ்பத்திரியில் கிடந்தான். 'ப்ளாஸ்டிக்' கன்னம் வைத்துக் கொண்டிருக்கிறான்" என்று என் பெருமைகளைத் தெரியப்படுத்தினேன் அந்த அதிகப்பிரசங்கிக்கு.

அறையிலிருந்த ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அவனுக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டேன். தரையிலிருந்து எழுந்திருக்க அவன் யத்தனித்தான்; முடியவில்லை.

அவன் தைரியசாலிபோல் காணப்பட்டானே தவிர வெறும் பயந்தாங்கொள்ளி என்பதை நான் உணர்ந்தேன்.

"நான் கேட்கும் கேள்விகளுக்கு ஒழுங்காக உண்மையாகப் பதில் சொல். டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்கு இன்று காலையில் போயிருந்தாயா?" என்று துவக்கினேன்.

"நான் எதற்காக அங்கு போகவேண்டும்?" என்றான் சற்று மிடுக்காகவே.

"பரசுராமின் கேள்விகளுக்கு விடை வேண்டுமே தவிர பதில் கேள்விகள் அனுமதிக்கப்படமாட்டாது," என்று கூறினேன், அதே விநாடியில் உண்மை பளிச்சிட்டது. மனத்திரையில் அந்த உருவம் புலப்பட்டது. காலையில் நானே இவனை டாக்டரின் ஆஸ்பத்திரியில் பார்த்தேன்.

கேல்கர் மௌனம் சாதித்தான்.

"சொல்......நான் இன்று காலை உன்னை அங்கே பார்த்தேனே!" என்று கர்ஜித்தேன்.

"நான் உங்களைப் பார்த்ததாக நினைவில்லையே" என்றான் விடாமல்.

"ஏய், யோசித்துப் பேசு......டாக்டரை யாரோ கொன்று விட்டார்கள். இன்று நீ அங்கு போயிருக்கிறாய்."

"டாக்டர் இறந்து விட்டதாக இப்போதுதான் நர்கீஸ் போன் செய்தாள். ஆமாம்......இன்று காலை நான் ஆஸ்பத்திரிக்குப் போனது உண்மைதான். ஆனால் டாக்டரின் மரணத்திற்கும் எனக்கும் எவ்விதமான சம்பந்தமும் கிடையாது"—குரலில் பணிவு ஒலிக்க ஆரம்பித்தது.

"அதை நான் கவனித்துக் கொள்கிறேன். எதற்காக நீ அங்கு போனாய்?"

"நர்கீஸ் போன் செய்தாள், அவளது மாமா ராவ்சாஹிப் கோவிந்தன் இன்று டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் ஆஸ்பத்திரிக்குப் போவதாக. ராவ்சாஹிப்புக்கு நான் நர்கீஸை மணந்து கொள்வதில் இஷ்டமில்லை.

என்னை அவர் பார்த்ததே இல்லை ; ஆனால் அப்படியும் ஏனோ துவேஷம் பாராட்டுகிறார்."

நேரில் பார்த்துவிட்டால் துவேஷம் வளருமே தவிரக் குறையாது என்று எண்ணினேன்.

"அங்கே ராவ்சாஹிப்பைச் சந்தித்துப் பேசலாமே யென்ற எண்ணத்தோடுதான் போனேன்" என்று முடித்தான் கேல்கர்.

"ஆகவே, அவரைச் சந்தித்துப் பயமுறுத்தப் பார்த்தாய். அதுதானே உன் திட்டம்?"

"இல்லை. நான் நல்லவன், யோக்யமானவன் என்பதை அவர் என்னுடன் பேசினால், அறிந்து கொள் வார் என்பதே என் கருத்து."

"அவரை ஆஸ்பத்திரியில் சந்தித்தாயா?"

"இல்லை. சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஒன்றரை மணி நேரம் அவருக்காகக் காத்திருந்தேன். விஸிட்டர் கள் அறையில் பலபேர் காத்திருந்தார்கள். கடைசியில் நான் சலிப்படைந்து எழுந்து போய்விட்டேன்."

"எங்கே போனாய்? படியேறி, இரண்டாம் மாடியி லுள்ள 'கன்ஸல்டிங்' அறைக்குப் போனாயா?"

"ஊஹூம்; நான் வெளியே வந்துவிட்டேன்."

"நீ வெளியில் போவதை யாருமே பார்த்ததாகத் தெரியவில்லையே, ஏன்?"

"அது என் தவறா?" என்றான் இளைஞன். நான் நாற்காலியிலிருந்து எழுந்தேன்.

"கேல்கர், இது உன் மஹாராஷ்டிரமல்ல. இங்கே பூசணிக்காயைச் சோற்றில் மறைத்தால் போலீஸ்காரர் கள்தான் அந்த வித்தையைப் பார்க்க வருவார்கள், தெரிந்துகொள்! நீ படியேறி, டாக்டரின் அறைக்கு இரகசியமாகப் போனாய். டாக்டர் அப்போது ராவ் சாஹிப் பல்லுக்கு ஏதோ சிகிச்சை செய்து கொண்டிருந் தார்; நீ மெதுவாகப் பூனைபோல் உள்ளே நுழைந் தாய். 'சரே'லென்று பாய்ந்து, டாக்டர் மேஜைமீதிருந்த ஒரு கத்தியை எடுத்து கோவிந்தனைத் தாக்கினாய். அப் போது டாக்டர் குறுக்கே வர நேர்ந்து விட்டது. அவர் இடது பக்கம் கழுத்தில் கத்தி ஊடுருவி விட்டது. நீ உடனே சாக்கடைக்குள் ஓடிப் பதுங்கும் பெருச்சாளி போல நழுவி விட்டாய்" என்றேன்.

"கிடையவே கிடையாது, இப்படி யெல்லாம் எதுவுமே நடைபெறவில்லை."

"நீ சொல்வதை நான் எப்படி நம்புவது? போகட்டும், நீ இங்கு ஏன் தங்கியிருக்கிறாய்?"

"நான் நர்கீஸை மனப்பூர்வமாய்க் காதலிக்கிறேன். நாங்கள் முதலில் பம்பாயில் சந்தித்தோம். எங்களுக்கிடையே பரிச்சயம் ஏற்பட்டு, நட்பாய் வளர்ந்து, காதலாய்க் கனிந்துவிட்டது. அவளுடைய மாமாவோடு வசிக்க நேரிட்டு அவள் இங்கே வந்துவிட்டாள். அவள் இல்லாத பம்பாய் எனக்கு நிலவில்லாத வானம். நானும் இங்கேயே வந்துவிட்டேன்."

"இங்கு என்ன செய்கிறாய்! உருப்படியாக?"

"காதல் செய்கிறேன், வேறு சிந்தனைக்கே இடமில்லை; அவசியமுமில்லை. பார்க்கும் இடங்களெல்லாம் நர்கீஸின் அழகிய முகம் தெரிகிறது."

நான் நகைத்தேன். நம் நாட்டில் இவனைப்போல் எத்தனையோ பித்தன்கள் இருக்கிறார்கள்!

"சரி, நாளைக்கே நீ அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாக வைத்துக்கொள். வேலை வெட்டி இல்லாமல் அப்புறம் என்ன செய்வாய்?"

"முதலில் அந்த இன்பத் திருமணம் நடைபெறட்டும். அப்புறம் இந்த விஷயங்களைப் பார்க்கலாம்" என்றான் பரவசமாக.

"இல்லை. இப்பொழுதே நீ அது பற்றி யோசிப்பது தான் நல்லது" என்று சொல்லிவிட்டு அறையிலிருந்து வெளியேறினேன். கீழே வந்து, என் லாம்ப்ரெட்டாவைக் கிளப்பினேன். ஏறியமர்ந்து மீனாக்ஷி ஹோட்டலுக்குப் போனேன்.

அங்கு முன் ஹாலில் நுழைந்தேன். 'கௌண்ட'ருக்குப் பின் உட்கார்ந்திருந்த குமாஸ்தாவிடம், "ஸ்ரீமதி பாரிஜாதம் எந்த அறையில் தங்கியிருக்கிறாள்?" என்று விசாரித்தேன். ஹாலை ஒட்டினாற் போலவே, ஹோட்டலுக்கு வந்து போவோர் பொதுவாக உட்கார்ந்து கொள்வதற்கான ஓர் அழகிய அறை இருந்தது. அங்கு அமர்ந்திருந்த ஒரு பெண்மணியைச் சுட்டிக்காட்டினார் அந்த குமாஸ்தா.

உடனேயே நேரே அந்த அம்மாளுக்கருகே செல்றேன். என்னைப் பார்த்ததும் புன்னகைத்தாள். ஸ்ரீமதி பாரிஜாதம் கதர்ச் சேலை தரித்திருந்தாள். எதிரிலிருந்த குட்டையான மேஜையில் கம்பளி நூலில் பின்னப்பட்ட ஒரு கைப் பை, நவீன ஹோஸ்தரில் செருப்பு அணிந்திருந்தாள். தலை சற்று நரை கண்டுவிட்டது.

"நான் துப்பறியும் பரசுராம். உங்களுடன் பேசவந்திருக்கிறேன்" என்று அறிவித்துக் கொண்டேன்.

"ஓ......தாராளமாகப் பேசலாமே" என்ருள். ஒயிலாகச் சிரித்தாள். அதே மூச்சில், சற்று ஆச்சரியப்படுபவள் போல், "ஏன், என்ன விசேஷம்?" என்று விசாரித்தாள்.

"டாக்டர் கிருஷ்ணஸ்வாமி இறந்து விட்டார்" என்றேன் நிதானமாக.

"என்ன, நிஜமாகவா?" என்று பரபரப்போடு கேட்டாள்.

"ஆமாம்...நிஜம்தான். நீங்கள்கூட இன்று அவர் ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தீர்கள் போலிருக்கிறதே?"

"ஆமாம்......போயிருந்தேன்."

"அப்போது மணி என்ன இருக்கும்?"

"12-ஆகிவிட்டது. 12-20க்கு சுந்தரம் என்னை லிப்ஃடின் மேலே அழைத்துப் போனுன். எனக்குக் காதில் கொஞ்சம் உபத்ரவம். அதற்காகத்தான் போனேன். கிட்டத்தட்ட பத்து நிமிஷம் டாக்டரின் அறையிலிருந்தேன். அப்புறம் வந்துவிட்டேன்."

"அந்தப் பத்து நிமிஷங்களில் டாக்டர் எப்படி இருந்தார்? எதையாவது எண்ணிப் பயப்படுபவர்போல் அல்லது கலக்கமடைந்தவர் போல் இருந்தாரா?"

"இல்லையே......சாதாரணமாகத்தான் இருந்தார். என்னுடன் தமாஷாகக்கூடப் பேசினுர்."

ஒரு நிமிஷம் சிந்தித்து அடுத்த கேள்வியைக் கேட்டேன். "சொக்கநாதன் என்பவரைத் தெரியுமா உங்களுக்கு? உங்களுக்கு அடுத்தபடி அவர்தான் டாக்டர் அறைக்குள் போயிருக்கிறுர்" என்றேன்.

உடனே பதில் தரவில்லை ஸ்ரீமதி பாரிஜாதம். சற்றுப் பொறுத்து, "ஏன் அவரைப் பற்றிக் கேட்கிறீர்கள்?" என்று வினவினுள்.

" இல்லை.........சொக்கநாதன்தான் கடைசியாக டாக்டரை உயிருடன் பார்த்திருப்பார் என்று ஊகிக்க இடமிருக்கிறது."

"சொக்கநாதனை எனக்குத் தெரியும். தெரிந்து கொண்ட விதத்தையும் சொல்லி விடுகிறேன். பதினைந்து வருஷங்களாக நான் கல்கத்தாவிலேயே தங்கியிருந்தேன். பத்து நாள் முன்புதான் இங்கு வந்தேன். ரெயிலில் சொக்கநாதன் என்னுடன் பிரயாணம் செய்தார். அந்தப் பிரயாணத்தின்போது தோன்றிய பரிச்சயம் தான்."

"இங்கு வந்து சேர்ந்த பிறகு நீங்கள் அவரைச் சந்திக்கவே யில்லையா ?"

"இரண்டு தடவைகள் சந்தித்தேன்—இரண்டாவது தடவையில்தான் அவர் எனக்கு ஹோட்டல் காவேரி யில் விருந்தளித்தார். அப்புறம் அவரை நான் பார்க்க வில்லை."

"ஏன் ?"

" அவரது நடத்தையைப் பார்த்து நான் கொஞ்சம் பயம் கொண்டேன். இது, அது, இவர்கள், அவர்கள் எல்லாவற்றையும், எல்லோரையும் பற்றித் தகவல் களைச் சேகரிக்க அவர் மிகவும் விரும்பினார். எனக்கு யார் யாரைத் தெரியும் என்று அறிய அவர் ஆவல் காட்டினார். சரி, இவருடன் பழகுவது உகந்ததல்ல என்று நான் நிறுத்திக் கொண்டேன்."

" ராவ்சாஹிப் கோவிந்தனைத் தெரியுமா உங்களுக்கு ?"

"தெரியும். ஒருவாரத்திற்கு முன் அவரை டாக்டரின் ஆஸ்பத்திரியில் பார்த்தேன். அன்று பேசமுடியவில்லை. கல்கத்தாவில் நாங்கள் நடத்திவரும் சேவா சங்கத்தைப் பற்றி நீங்கள் அறிவீர்கள் என்று நம்புகிறேன். அந்த சேவாசங்கம் சம்பந்தமாக கோவிந்தன் அவர்களைப் பார்க்க நான் அவர் வீட்டுக்குப் போயிருந்தேன். பகீரதப் பிரயத்தனம் செய்து நூறு ரூபாய் வாங்கிவிட்டேன் " என்று கூறினாள் பாரிஜாதம் நகைத்த வண்ணம்.

" ஏன் சிரிக்கிறீர்கள் ?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை...ராஜ்ய கவர்னர்கள், அரிய பெரிய தலைவர்கள், தொழில் பிரமுகர்கள் பலபேர் எங்கள் சங்கத்திற்கு ஆயிரக் கணக்கில் நன்கொடை வழங்கியிருக்கிறார்கள். ராவ்சாஹிப் கோவிந்தன் லட்சாதிபதி என்று இங்கு எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் அவரிடம் நூறு ரூபாய் வாங்குவதற்குள் நான் பட்ட பாடு!...அதை நினைத்துத் தான் சிரித்தேன்" என்றாள் பாரிஜாதம்.

"பணக்காரர்களில் பெரும்பாலோர் இப்படித் தான். உம்...காலணாக்களுக்குக் கருமித்தனம் செய்யாவிட்டால் அவர்கள் நாலடுக்கு மாளிகைகள் கட்டுவது எப்படி?" என்றேன்.

ஸ்ரீமதி பாரிஜாதம் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தாள். "நீங்கள் ஒரு புகழ்பெற்ற துப்பறியும் நிபுணரென்று கேள்விப்பட்டேன். எங்கள் சேவா சங்கத்திற்கு ஏதாவது உதவி செய்தீர்களானால்..." என்று இழுத்தாள்.

"உங்கள் சங்கத்தின் நோக்கங்கள் என்ன?"

"நம் நாட்டில் எத்தனையோ சிறுவர்கள், வாலிபர்கள் சோற்றுக்கு வழியின்றி நாடோடிகளாய்த் திரிகிறார்கள். இப்படியே கெட்டபழக்கங்கள் படிந்து திருடவும், மற்ற குற்றங்கள் செய்யவும் துணிந்து விடுகிறார்கள். இத்தகைய விபத்து சமூகத்துக்கு நேரிடாமல் தடுக்க வேண்டும். ஏற்கனவே தாழ்ந்து விட்ட இளைஞர்களைச் சீர்திருத்தி நாட்டுக்கு நல்ல பிரஜைகளாக அவர்களை மாற்ற வேண்டும். இங்கு ஒரு கிளை ஸ்தாபனம் ஆரம்பிக்கவே நான் வந்திருக்கிறேன்."

மறுவார்த்தை பேசாமல் நான் பர்ஸை எடுத்து, அதிலிருந்து ஒரு நூறு ரூபாயை ஸ்ரீமதி பாரிஜாதத்திடம் நீட்டினேன்.

"வந்தனம்...நீங்கள் விசாலமான இதயம் படைத்தவர்" என்று நன்றி தெரிவித்துக் கொண்டே அவள் அந்த நூறு ரூபாய் நோட்டைக் கைப் பைக்குள் பத்திரப்படுத்திக் கொண்டாள்.

ஸ்ரீமதி பாரிஜாதத்துடன் பேசிய பிறகு என் சந்தேகம் பூராவும் சொக்கநாதனைச் சுற்றியே சுழன்றது.

ஜிக்கொலைக்கும் அவருக்கும் நிச்சயம் ஏதோ சம்பந்தம் இருக்கிறதென்று தீர்மானித்தேன்.

சில விநாடிகளில் ஸ்ரீமதி பாரிஜாதத்திடம் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். லாம்ப்ரெட்டா ஹோட்டல் காவேரியை எட்டிக் கொண்டிருந்தது.

## 3

ஹோட்டல் காவேரியின் எதிரில் லாம்ப்ரெட்டாவிலிருந்து இறங்கி முன் ஹாலுக்கு விரைந்தேன். அங்கு நின்ற ஒரு ஜவான் என்னைப் பார்த்ததும் என்னிடம் ஓடிவந்தான்.

"இன்ஸ்பெக்டர் நாயர் மூன்றும் மாடியில் 120-ம் நம்பர் ரூமில் இருக்கிறார்" என்றான்.

"என்ன நடந்தது?" என்று கேட்டேன் கவலையுடன்.

"சொக்கநாதன் அரைமணி நேரத்திற்கு முன் இறந்துவிட்டார்!"

என்னுள் பொங்கியெழுந்த வியப்பை அடக்க முடியவில்லை. அந்த வினாடிவரை என் சந்தேகம் பூராவும் சொக்கநாதன்மீது பதிந்திருந்தது. அவர் திடீரென்று அரைமணி நேரத்திற்கு முன் இறந்துவிட்டார் என்று கேட்டதும் அந்த சந்தேகப் பிசாசு ஓடிவிட்டது. நானும் லிப்ஃட் இருந்த மூலைக்கு ஓடினேன். லிப்ஃடில் ஏறி மூன்றும் மாடி 120-ம் நம்பர் அறைக்குச் சென்றேன். இன்ஸ்பெக்டர் நாயர் என்னைப் பார்த்ததும் இரண்டே எட்டில் அருகில் வந்து என் இரு கைகளையும் பற்றிக் கொண்டு, "ப்ரதர்,...சொக்கநாதனுடன் பேசுவதற்காக அரை மணிக்கு முன் இங்கு வந்தேன். அவர் அப்போது இறந்துகிடந்தார். நீங்கள் எங்கிருப்பீர்கள் என்று தெரியாததால் டெலிபோன் செய்யமுடியவில்லை" என்றார்.

அறையில் இருந்த கட்டிலினருகில் சென்றேன். உடல் கிடந்தது. சுருட்டை மயிர்; ஸ்டாலின் மீசை. சவத்தின் முகத்தைப் பார்த்ததுமே, சொக்கநாதன் மிகுந்த வேதனைப்பட்டு இறந்திருக்கிறார் என்பதை

உணர்ந்தேன். அவர் உழன்ற வேதனையும் வலியும முகத்தில் சுவடு விட்டுச் சென்றிருந்தன. தலைமுதல் பாதம்வரை பார்த்தேன். காயம் எதுவும் இல்லை.

"நாயர் பாய், டாக்டருக்குச் சமாசாரம் தெரிவித்தாயிற்றா?" என்று கேட்டேன்.

"ஆயிற்று ப்ரதர்... இப்போது வந்து விடுவார்" என்றார் நாயர்.

ஹோட்டல் மானேஜரைச் சந்திக்க நான் விரும்பினேன். நாயர் அவருக்கு ஜவான் மூலம் செய்தி அனுப்பினார். இரண்டு நிமிஷங்களில் மானேஜர் வந்துவிட்டார். நாங்கள் இருவரும் அவர் அருகில் சென்றோம்.

நாயர் பேசினார். "இதோ இவர் என் நண்பர்; இவரிடம் உங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் சொல்லுங்கள்" என்று கூறினார், மானேஜருக்கு என்னைச் சுட்டிக்காட்டி.

அவர் ஆரம்பித்தார். "அரைமணி நேரத்திற்கு முன் எனக்குத் தகவல் வந்தது இந்த அறையிலிருப்பவர் இன்னும் உணவருந்த வரவில்லை யென்று. என்னவோ ஏதோ என்று பார்த்துப்போக நான் வந்தேன். கதவுகள் மூடியிருந்தன. தள்ளினேன். உள்ளே தாளிடப்படாததால் திறந்து கொண்டன. சொக்கநாதன் கட்டிலில் படுத்திருந்தார். அருகில் சென்று குனிந்து பார்த்தேன். மூச்சு வருவதாகத் தோன்றவில்லை. ஏதோ இனம் தெரியாத திகில் என்னைச் சூழ்ந்தது. உடனே கீழே சென்றேன், போலீஸுக்குப் போன் செய்ய. அதேசமயம் ஆறு ஜவான்களோடு இன்ஸ்பெக்டர் ஸார் உள்ளே நுழைவதைப் பார்த்தேன். இதுவும் நல்ல வேளைதான் என்று அவரிடம் எல்லாவற்றையும் நேரில் சொல்லி விட்டேன்."

"சொக்கநாதன் இங்கு தங்கவந்து எவ்வளவு நாட்களாகின்றன?" என்று கேட்டேன்.

"பத்து நாட்கள், ஸார்."

"அவரைப் பார்க்க யாரும் வருவது உண்டா?"

"நானறிந்த மட்டில் நிறையப்பேர் வருவது இல்லை. ஆனால் ஒரு ஸ்திரீ இரண்டு மூன்று தடவைகள் வந்தாள். ஒரு நாள் இரவு சொக்கநாதனுடன் விருந்துண்டாள்."

"அந்த அம்மாளின் பெயர் தெரியுமா?"

"தெரியாது...அதாவது நினைவில்லை."

"ஸ்ரீமதி பாரிஜாதமா?"

"அப்படித்தான் எண்ணுகிறேன். ம்...ஆமாம். அதுவேதான்."

"சொக்கநாதன் தினமும் வெளியில் போவாரா?"

"வழக்கமாகப் பகல் முழுதும் அறையில்தான் தங்கியிருப்பார். இரவில் எங்கேனும் போவார். அதிக நேரம் கழித்துத்தான் திரும்புவார்."

"யாருக்காவது டெலிபோன் செய்வாரா?"

"தினமும் பலருக்கு டெலிபோன் செய்வார்."

"யார், யாருக்கு? ஒரு சில பேர்களையாவது சொல்லமுடியுமா?"

"ஊஹூம். கஷ்டம். எவ்வளவு முறை டெலிபோனை உபயோகித்தார் என்று வேண்டுமானல் பார்த்துச் சொல்லிவிடலாம்."

நான் யோசனையில் மூழ்கினேன். மானேஜர் கூறிய தகவல்கள் என் சிந்தனையில் சுழன்றன. தலை கொதிக்க ஆரம்பித்தது. அப்போது போலீஸ் டாக்டர் அறையில் நுழைந்தார். அவரைத் தொடர்ந்து கட்டிலருகில் போனேன்.

அவர் சொக்கநாதன் உடலைப் பரிசோதித்தார். "விஷம் கலந்துதான் இறந்திருக்கிருர் என்று எண்ணுகிறேன். முறைப்படி எல்லாப் பரிசோதனைகளும் செய்யாமல் என்ன விஷம் என்பனபோன்ற விவரங்களைச் சொல்ல முடியாது" என்ருர்.

திடுக்கென்று திரும்பி நாயரைக் கூர்ந்து நோக்கினேன். "நாயர் பாய், உடனே ஜீப்பில் ஹோட்டல் மீனாக்ஷிக்குச் செல்லுங்கள். அவசியமானல் கைது செய்தாவது ஸ்ரீமதி பாரிஜாதத்தைப் பிடியுங்கள்" என்றேன்.

உடனேயே இரண்டு ஜவான்களை அழைத்துக் கொண்டு இன்ஸ்பெக்டர் நாயர் வெளியேறினுர். போலீஸ் டாக்டர் இன்னும் உடலைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார். அறையிலிருந்த எல்லாப் பொருள்களையும் குடைந்து பார்க்கலானேன்.

"கல்கத்தாவிலிருந்து வந்து குதித்துள்ள இந்த சொக்கநாதன் யார்? இவருடைய தொழில் என்ன?"— இந்தக் கேள்விகளுக்கு விடை காணுமல் மேலே விசாரணை தொடர்வது சாத்தியமில்லை.

அறையிலிருந்த அலமாரியைக் குடைந்தேன். சில டயரிகள், பல புகைப் படங்கள் அகப்பட்டன. டயரிகளைப் புரட்டிப் பார்த்ததில் சொக்கநாதன் எப்படிப் பட்டவர் என்பது புலனுயிற்று. சமூகத்தில் பிரபலஸ்தர்களான பலரைப் பற்றிப் பலபல தகவல் கள் சேகரித்து வைத்திருந்தார். அந்தப் படங்களெல் லாம் பலருடையவை; மிக அந்தரங்கமானவை. இவற்றை யெல்லாம் எப்படிச் சேகரித்தாரென்று நான் வியந்தேன். 'உங்கள் வாழ்க்கை மர்மங்களை வெளிப்படுத்திவிடுவேன்' என்று பயமுறுத்திப் பணம் பறிப்பவர் என்பதை உணர்ந்தேன். சிகரெட்டைப் பற்றவைத்துக் கொண்டு அறைக்கு வெளியில் வராந்தா வில் மேலும் கீழும் உலாவினேன். டாக்டர் கிருஷ்ண ஸ்வாமியின் மரணத்திற்கும் சொக்கநாதன் இறந்து கிடப்பதற்கும் ஏதாவது தொடர்புண்டா? இவை ஒரே ஒரு நபர் செய்த கொலையா? என் சந்தேகம் பூராவும் இங்கு வருவதற்குமுன் நான் சந்தித்த பாரிஜாதத்தின்மீது திரும்பியது. ஒரு வேளை சொக்கநாதன் அவளைப் பய முறுத்தினுரோ? அப்படியானுல் அவளே அவரைக் கொலை செய்திருக்கக் கூடுமல்லவா? ஆனுல் டாக்டரை ஏன் கொல்லவேண்டும்? காரணம் தெரியவில்லை.

வேருரு விதத்தில் சிந்தனை ஓடியது. டாக்டர் கிருஷ்ணஸ்வாமி நல்ல தனவந்தர். அவரைக் கடைசி யாக உயிருடன் பார்த்தது சொக்கநாதன். ஒரு வேளை டாக்டரைப் பயமுறுத்தி பணம் பறிக்க சொக்க நாதன் முயன்றிருப்பார். டாக்டர் இரகசியமாக சொக்கநாதனுக்கு விஷம் கொடுத்திருக்கலாம்.

ஊஹும், என் எண்ணங்கள் சரியாக உருவமைய வில்லை. காரண காரியங்கள் ஊடும் பாவும் போல் ஓடினுல்தான் ஒரு வடிவம் எண்ணத் தறியில் உருவா கும். என்னையே கடிந்து கொண்டேன். சொக்க நாதன் டாக்டரைப் பயமுறுத்தி யிருந்தால் அவரிடம் சிகிச்சைக்குச் செல்வாரா? ஒரே குழப்பமாக இருந்

தது. ஸ்ரீமதி பாரிஜாதத்துடன் உடனே பேசியாக வேண்டும்.

அதே கணத்தில் நாயர் வேகமாக வந்தார். "நாயர், கொண்டு வந்து விட்டீர்களா?" என்று ஆர்வத்தோடு கேட்டேன்.

"அவள் அங்கே இல்லை. நீங்கள் போய்ப் பேசிவிட்டு வந்ததும் வெளியே போனளாம். இன்னும் திரும்பவில்லை. தனது அறையைப் பூட்டி சாவியை மானேஜரிடம் தந்துவிட்டுச் சென்ருளென்று தெரிகிறது."

என் விசாரணைகளுக்கு மறுபடி ஒரு முற்றுப்புள்ளி. ஆனல் எப்படியும் இந்த ஸ்ரீமதி பாரிஜாதம் ஹோட்டலுக்குத் திரும்பியேயாக வேண்டுமல்லவா?

"நாயர் பாய், பாரிஜாதத்தை நாம் பிடித்தாக வேண்டும். அங்கு ஹோட்டலில் ஒரு ஜவானை நிறுத்தி வையுங்கள். அவள் வந்ததும் நமக்கு போன் செய்யட்டும்."

"நானே அந்த ஏற்பாடு செய்து விட்டேன்."

யோஜனைகள் கவிந்த மனத்துடன் கீழே சென்றேன். டெலிபோன் டைரக்டரியைப் புரட்டி ஒரு விலாசத்தைக் குறித்துக் கொண்டு ஹோட்டல் காவேரியிலிருந்து வெளியேறினேன்.

* * *

## 4

எனது லாம்ப்ரெட்டா வெகு வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தது. மாலை மணி நான்கு. ஸ்டர்லிங் ரோடில் ஒரு பங்களா காம்பவுண்டுக்குள் லாம்ப்ரெட்டாவைத் திருப்பினேன்.

வராந்தாவில் நின்ற ஒரு வேலையாள் என்ன வேண்டுமென்று கேட்டான். சொன்னேன். சில விநாடிகளில் ஓர் அழகிய பெண்மணி வந்தாள். லாம்ப்ரெட்டாவிலிருந்து இறங்கி நானும் வராந்தாவிற்குப் போனேன். இரண்டு நாற்காலிகளில் இருவரும் உட்கார்ந்து கொண்டோம். அவள் உடுத்தியிருந்த புடவை கண்ணைப் பறித்தது. ஒரே ஜாஜ்வல்யமாக இருந்தது.

"நான்தான் துப்பறியும் பரசுராம்" என்று அறி முகம் செய்து கொண்டேன்.

"ஓ, அந்தப் பெயர் எனக்கு நன்ருகத் தெரியும்! எங்கள் மாதர் சங்கத்தில் உங்களைப்பற்றிப் பல தடவைகள் பேச்சு வந்திருக்கிறது."

நான் பதில் கூருமல் லேசாகச் சிரித்தேன்.

"இப்போது இங்கு வந்திருப்பதன் நோக்கத்தை அறியலாமா?" என்ருள் அவள். அதே முச்சில் தொடர்ந்து, "என் கணவர் பம்பாய் சென்றிருக்கிருர். வருவதற்கு இன்னும் ஒரு வாரம் ஆகும்" என்று தகவல் கொடுத்தாள்.

"பாதகமில்லை. இப்போது நான் தேடி வந்திருப்பது உங்களைத்தான். உங்கள் கணவரை யல்ல!" என்றேன்.

"என்னையா?...... வேலைக்காரன் தவறுதலாகச் சொல்லி விட்டான். ஹூம், இந்தக் கம்யூனிஸம் வந்ததிலிருந்தே இப்படித்தான் எல்லாம் குட்டிச்சுவராகி விட்டது. சரி, நீங்கள் ஏதாவது சாப்பிடுகிறீர்களா? காப்பி, டீ, ஓவல்டின், ஹார்லிக்ஸ், கொக்கோ, ராகி மால்ட், போர்ன்விடா, மைலோ?......" என்று அடுக்கிக் கொண்டே போனுள் அந்த அம்மணி.

"நீங்கள் சொன்ன எல்லாவற்றையுமே நான் சாப்பிடத் தயார்; ஆனுல் இப்போது நான் உடனேயே கிளம்ப வேண்டும். எதற்கும் ஒரு கப் ஓவல்டின் கொடுத்தீர்களானுல் பருகுகிறேன்" என்றேன்.

"அஞ்சலை" என்று இரைந்து கூப்பிட்டாள் அந்தப் பெண்மணி. ஒரு கிழவி உள்ளேயிருந்து வந்தாள். "சீக்கிரம் இரண்டு கப் ஓவல்டின் கொண்டுவா" என்று உத்தரவிட்டாள்.

அஞ்சலை தலையசைத்து விட்டு உள்ளே சென்ருள்.

"இன்று டாக்டர் ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தீர்களா?" என்று விசாரணையைத் துவக்கினேன்.

"எந்த டாக்டர் ஆஸ்பத்திரிக்கு?"

"ஏன் அப்படிக் கேட்கிறீர்கள்? இன்று பல டாக்டர்கள் ஆஸ்பத்திரிக்குப் போனீர்களா?"

"பொதுவாக பலவீனத்திற்காக ஒரு லேகியம் வாங்க ஆயுர்வேதாஸ்ரமம் போயிருந்தேன். காலில் ஒரு கொப்புளம். அதற்கு மருந்து வைத்துக் கட்டிக் கொள்ள அங்கிருந்து டாக்டர் ராமாராவ் நர்ஸிங் ஹோம் போனேன். அப்புறம் கண் பரிசோதனைக்காக டாக்டர் நாகராஜ ராவிடம் போயிருந்தேன். அதற்குப் பின் டாக்டர் லக்ஷ்மியிடம் போயிருந்தேன். ஆனால் அதை உங்களிடம் சொல்ல வேண்டாம்!" நமுட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டாள். "அப்புறம் தான் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் போயிருந் தேன்."

பாஞ்சாலி சுவாமிநாதன் சொன்னதைக் கேட்ட தும் எனக்குச் சிரிப்பு வந்தது. இப்போதெல்லாம் உடலின் ஒவ்வொரு உறுப்பிலும் வரும் நோய்களுக் கென்று ஒவ்வொரு டாக்டர் விசேஷப் பயிற்சி பெற் றிருக்கிறார். ஆகவே ஒரே நாளில் ஒரு நோயாளி பத்து டாக்டரைக் கலந்தாலோசிப்பதில் வியப்பில்லை. மனி தனை இப்படிக் கை, கால், காது, மூக்கு என்று பிரித் துக் காட்டுவதைப் பார்க்கும்போது ஒரு விமர்சகர் ஒரு புத்தகத்தைப் பற்றி எழுதியிருந்தது நினைவுக்கு வந்தது. "இந்தப் புத்தகத்தில் முன்னூறு ஆச்சர்யக் குறிகள், இரு நூறு கேள்விக் குறிகள், ஆயிரம் முற்றுப் புள்ளிகள் இருக்கின்றன" என்னும் ரீதியில் அமைந் திருந்தது அந்த விமர்சனம்.

"எத்தனை மணிக்கு டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தீர்கள்?"

"சரியாக காலை 10-30க்கு."

"நீங்களும் சிறிது நேரம் விஸிட்டர்கள் அறையில் காத்திருந்தீர்களா?"

"ஆமாம், கொஞ்சம் உட்கார்ந்திருந்தேன். உட லுக்கு நல்லதுதானே என்று கொஞ்சம் மேலும் கீழும் உலாவினேன்."

"அங்கே அப்போது யார் யாரைப் பார்த்தீர்கள், சொல்வீர்களா?"

ஒரு குறும்புச் சிரிப்போடு பாஞ்சாலி சுவாமிநாதன் என்னைப் பார்த்தாள். நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து

கொண்டாள். நழுவி விழுந்த மேலாக்கைச் சரி செய்து கொண்டாள்.

"அங்கு நான் போனபோது ஓர் ஆசாமி உட்கார்ந் திருந்தார். அவரைப் பார்த்து நான் பயந்து போய் விட்டேன். பொதி போல் உடல்; ஸ்டாலின் மீசை. அறையில் வேறு யாரும் இல்லை. என்னை அவர் முறைத் துப் பார்த்தார். எனக்கு ஒரு மாதிரியாகப் போய் விட்டது. நல்ல வேளை டாக்டர் அப்போது அவரைக் கூப்பிட்டனுப்பி விட்டார். லிப்ஃடில் ஏறிப் போனுர். அப்போது தான் அவள் படி யிறங்கி வந்து கொண்டிருந்தாள். என்னைப் பார்த்தாள்; ஆனுல் புரிந்து கொண்டதற்கடையாளமாக ஒரு புன்னகை கூடப் புரியவில்லை. நான் யாரென்றே தெரிந்து கொள்ளாதவள் போல் இறங்கி வெளியே போய் விட்டாள். என் உடல் கொதித்தது. அவள் கல்கத்தாவிலிருந்து வந்து பத்து நாட்கள் கூட ஆக வில்லை. அதற்குள் கர்வியாகி விட்டாள்."

"அவள் யார்?"

"ஸ்ரீமதி பாரிஜாதம்......ஒரு வாரத்திற்கு முன் அவளை டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் ஆஸ்பத்திரியில் சந்தித்தேன். என்னுடன் பேசினுள். நல்லவள் என்று அபிப்பிராயம் கொண்டேன். 'வீட்டுக்கு வாருங் கள்' என்று அழைத்தேன்."

"வந்தாளா?"

"இல்லை...இன்று காலை அவள் நடந்து கொண்ட தைப் பார்த்தபோது அவள் வராததே நல்லதென்று முடிவு கட்டினேன். என்னைப் பார்த்ததும் பார்க்காதது போல் போனுள், ராங்கிக்காரி."

"அப்புறம் என்ன நடந்தது?"

"அந்த ஸ்டாலின் மீசைக்காரர் 12-40க்குப் பின் வெளியேறினுர். டாக்டர் என்னை எந்த நிமிஷமும் அழைத்து விடக் கூடுமாதலால் ஒரு முறை பாத்-ரூம் போய்விட்டு வந்தேன்."

வேறு யாரும் இறங்கி வருவதைப் பார்த்தீர் களா?"

"இல்லை; நான் கடைசியாகப் பார்த்தது அந்த ஸ்டாலின் மீசைக்காரனைத் தான்."

"யாரும் மேலே 2-ம் மாடிக்கு ஏறிப்போவதைப் பார்த்தீர்களா?"

"இல்லை. நான் விஸிட்டர்கள் அறையில் இருந்த வரை பார்க்கவில்லை."

"பாத்-ரூமில் எவ்வளவு நேரம் இருந்தீர்கள்?"

"மூன்று நிமிஷம் இருக்கும்."

"அப்போது யாரும் இறங்கி வெளியே போயிருக்கக்கூடும், இல்லையா?"

"முடியும்."

"ஸ்ரீமதி பாரிஜாதம் முதன் முறை உங்களுடன் பேசியபோது எங்கு தங்கியிருப்பதாகச் சொன்னாள்?"

"மீனாக்ஷி ஹோட்டலில். இங்கு தான் வசித்து வந்தாளாம். பதினைந்து வருஷத்திற்கு முன் கல்கத்தா போனாளாம்."

"அவள் டாக்டர் அறைக்குப் போவதை நீங்கள் பார்க்க வில்லையா?"

"ஊஹூம். நான் ஆஸ்பத்திரியில் நுழைவதற்கு முன்னரே மேலே போயிருக்கவேண்டும். இறங்கி வரும் போது தான் பார்த்தேன்."

"நீங்கள் ஆஸ்பத்திரிக்குப் போவதற்கு முன்னரே மீசைக்கார ஆசாமி அங்கு வந்து விட்டார், இல்லையா?"

"ஆமாம், நான் காரிலிருந்து இறங்கி விஸிட்டர்கள் அறைக்குள் நுழைந்தபோது அவர் அங்கு ஸோபாவில் பிள்ளையார் போல் உட்கார்ந்திருந்தார்."

"அப்புறம்?"

"டாக்டர் என்னை ஒரு மணிக்குக் கூப்பிட்டிருக்க வேண்டும். அவர் எப்போதுமே ஒரு நிமிஷம் கூடத் தவற மாட்டார். மணி ஒன்றைத் தாண்டி விட்டது. அவர் என்னைக் கூப்பிடவில்லை. நானும் காத்துக் கொண்டேயிருந்தேன். எனக்கு உடம்பு சரியாயில்லை. கொப்புளம் வலித்தது. கண் டாக்டர் போட்ட மருந்து உறுத்தியது. காலையில் லேகியத்தைச் சாப்பிட்டது வாந்தி யெடுக்கும் உணர்ச்சியைக் கிளப்பியது. இதெல்லாம் போதாதென்று ஒரு பல் வலித்தது. எனக்கு ஆத்திரம் வந்து விட்டது. கோபத்தோடு எழுந்து

லிப்ஃட் அருகில் போனேன். சுந்தரம் ஒரு சுவாரஸ்ய மான நாவலில் மூழ்கியிருந்தான். அவனிடம் சத்தம் போட்டேன். 'டாக்டர் என்னதான் செய்கிறார், பார்த்து வா' என்று உறுமினேன். எவ்வளவு பெரிய டாக்டரா னால் எனக்கென்ன?

"முதலில் சுந்தரம் தயங்கினான். பிறகு என் கோபத்திற்குப் பயந்து மேலே போனான். இரண்டு நிமிஷம் கழித்துத் திரும்பி வந்து தான் பார்த்ததைச் சொன்னான். அங்கிருப்பது சரியல்ல என்று எனக்குத் தோன்றியது. போலீஸ் வரும். ஏதாவது சம்பந்த மில்லாமல் கேள்வி கேட்பார்கள். காரில் ஏறிக்கொண்டு வந்துவிட்டேன்."

"ஸ்ரீமதி பாரிஜாதத்தின் சமூக சேவைச் சாமி யாருக்கு நீங்கள் ஏதாவது நைவேத்யம் படைத்தீர் களா?"

"ஓ! முதல் சந்திப்பின்போதே பேச ஆரம்பித்து ஒன்றிரண்டு நிமிஷங்களில் அது பற்றி பிரஸ்தாபித்தாள். உடனே ஐம்பது ரூபாய் எடுத்துக் கொடுத்தேன். மறு படி பார்க்க நேரிடும்போது அவள் இப்படி அநாகரிக மாக நடந்து கொள்வாள் என்று தெரிந்திருந்தால் கண்டிப்பாகக் கொடுத்திருக்க மாட்டேன்."

"ஏதாவது ரசீது எழுதிக் கொடுத்தாளா?"

"கொடுத்தாள்."

நான் வியப்புற்றேன். பாஞ்சாலி சுவாமிநாதனுக்கு ஐம்பது ரூபாய்க்கு ரசீது தந்த பாரிஜாதம் நான் வழங்கிய நூறு ரூபாய்க்கு ஏன் ரசீது தரவில்லை?

"நீங்கள் ரசீது வேண்டுமென்று கேட்டீர்களா?" என்று விசாரித்தேன்.

"ஊஹூம். கைப் பையிலிருந்து நான் ஐந்து பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்துக் கொடுத்தேன். உடனே அவளாகவே தனது கைப் பையிலிருந்து ரசீது புத்த கத்தை எடுத்து எழுதிக் கொடுத்து விட்டாள்."

"ரசீது இங்கு இருக்கிறதா?"

"இருக்கிறது. தேவையானால் எடுத்து வரு கிறேன்."

"தயவு செய்து எடுத்து வந்தீர்களானால் கடமைப் பட்டிருப்பேன்."

பாஞ்சாலி சுவாமிநாதன் நாற்காலியிலிருந்து எழுந்து உள்ளே சென்ருள். சில நிமிஷங்களில் ரசீது டன் வந்தாள். அவள் தந்த ரசீதை கவனமாகப் பரிசீலித்தேன். "சேவா சங்கம்—5, சித்தரஞ்சன் தெரு—கல்கத்தா" என்று தலைப்பில் பிரசுரிக்கப்பட்டிருந்தது. டெலிபோன் இலக்கமும் குறித்திருந்தது.

" இந்த ரசீதை என்னிடம் தருவீர்களா?"

" அதற்கென்ன? எடுத்துச் செல்லுங்கள்! ஸ்ரீமதி பாரிஜாதத்தை எங்காவது சந்திக்க நேரிட்டால் இதை அவளிடம் காண்பித்து இனிமேலாவது கொஞ்சம் நாகரிகமாக நடந்து கொள்ளச் சொல்லுங்கள், சேவா சங்கம் என்ற நல்ல ஸ்தாபனத்தின் பெயரை ஏன் கெடுக்கிருள்?"

நான் பதில் கூறுமுன் அஞ்சலை இரண்டு கப் ஓவல்டின் எடுத்து வந்தாள். இருவரும் அதைப் பருகுவதில் முனைந்தோம். அப்புறம் பாக்குத்தூள் தந்தாள் பாஞ்சாலி சுவாமிநாதன். அதை வாயில் போட்டுக் கொண்டு, 'நமஸ்தே' கூறி விடைபெற்று வெளியேறினேன்.

எனது லாம்ப்ரெட்டா வீட்டுக்கு விரைந்தது. வீடு போய்ச் சேர்ந்தபோது அடித்துப் போட்டது போல் எனக்கு அசதியாக இருந்தது. தூக்கம் வந்தது. மேலே போனேன். கல்கத்தா சேவா சங்கத்துக்கு ஒரு 'ட்ரங்க் கால்' ஏற்பாடு செய்தேன். சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அறையில் அங்கும் மிங்கும் உலாவினேன். கால்மணி நேரம் கூடச் சென்றிராது. டெலிபோன் மணியடித்தது. ரிஸீவரை எடுத்தேன்.

" ஹல்லோ......ஸ்பீக் அப் ப்ளீஸ்......கல்கத்தா கனெக்ஷன்" என்றது 'எக்ஸ்சேஞ்' குரல்...

" ஹல்லோ..."

" நமஸ்காரம்...சேவா சங்கம் காரியதரிசி பேசுகிறேன். நீங்கள் யார்? உங்களுக்கு என்ன வேண்டும்?"—குரலில் பணிவும் பண்பும் மிகுந்திருந்தன.

" நான் ஸேட் கிருஷ்ணதாஸ் லாலா சந்தின் காரியதரிசி. நீங்கள் ஸ்ரீமதி பாரிஜாதம் என்று ஓர் அம்மாளை இங்கு அனுப்பி யிருக்கிறீர்களா?" என்று விசாரித்தேன்.

" ஆமாம்...ஏன் கேட்கிறீர்கள்?"

"நேற்று ஸேட்ஜியை அந்த அம்மாள் சந்தித்துப் பேசினார்கள். ஸேட்டுக்கு உங்கள் சங்கத்தின் தொண்டு ரொம்பவும் அரிய சேவை யென்று பட்டிருக்கிறது. ஒரு லக்ஷம் ரூபாய் நன்கொடை கொடுக்கத் தீர்மானித்திருக்கிறார். ஸ்ரீமதி பாரிஜாதத்திடம் 'செக்' கொடுக்கலாமா என்று கேட்டு ஊர்ஜிதம் செய்து கொள்ளச் சொன்னார்."

"ஒரு லக்ஷம் ரூபாயா......முதலில் ஸேட்ஜிக்கு எங்கள் மனமார்ந்த வந்தனத்தைத் தெரியப்படுத்துங்கள், ஸார். இவரைப்போல் பலர் உதவி செய்ய முன் வந்தால் 'ஏழை யென்றும் அடிமை யென்றும் எவனுமில்லையே' என்ற லட்சிய பூமியாக்கி விடலாம் நமது நாட்டை. சமூகத்தின் குப்பை மேட்டில் விட்டெறியப் பட்ட பலர் புது வாழ்வு பெறலாம்."

"அதெல்லாம் சொல்லாதீர்கள்......பணக்காரர்கள் தங்கள் செல்வத்திற்கு உடைமையாளர்களாய்த் தங்களை எண்ணிக் கொள்வதைக் காட்டிலும் அதை ஒழுங்காகச் செலவிடுவதற்கான தர்ம கர்த்தாக்களாகத் தான் நினைத்துக் கொள்ள வேண்டும். உம், அது போகட்டும், 'செக்'கை ஸ்ரீமதி பாரிஜாதத்திடம் கொடுத்து விடலாமா ?"

"கவலையே வேண்டாம், ஸார். பதினைந்து வருஷங்களாக இந்த சங்கத்திற்காகப் பாடுபடுகிறாள் அந்த அம்மணி. அப்பழுக்குக் கூற முடியாத குணச் சிறப்புப் படைத்தவள்."

"வந்தனம். எதுவும் தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள்" என்று கூறிவிட்டு ரிஸீவரை வைத்தேன். யோசனை ஒரு புறம் சூழ்ந்து வர அடுத்த அறைக்குப் போய் என் கட்டிலில் விழுந்தேன். என்ன செய்கிறோம் என்று எண்ணிப் பார்க்கு முன் கண்கள் தாமாக மூடிக் கொண்டன.

# 5

நான் விழித்தெழுந்த போது மாலை மணி 5-க்கு மேல் ஆகிவிட்டது. தூங்கும் போதாவது உள்ளுணர்வில் ஏதாவது சிந்தனைகள் உதித்து உருப்பெறும் என்று நம்பியிருந்தேன். அது நடைபெறவில்லை. நான்கைந்து தடவை எச்சில் கூட்டி விழுங்கினேன். தொண்டையில் அந்த வேதனை போய்விட்டது. அதுவே ஒரு மகிழ்ச்சியை அளித்தது. பசியால் உயிர் போய்க் கொண் டிருந்தது. கிருஷ்ணையாவைக் கூப்பிட்டேன், 'சாப்பிட ஏதாவது தயார் செய்' என்று சொல்ல. உடனே நினைவுக்கு வந்தது, அவன் குளிர்ஜுரத்தோடு கூடத்தில் படுத்திருப்பது. ஹூம், நமக்குப் பசியெடுக்கும் போதென்று இந்த சிப்பந்திகளுக்கு ஏதாவது கேடு வந்து விடுகிறது. பாரதி கூறியது போல 'பார்வை யிலே சேவகன்' யாராவது கிடைத்தால்தான் வேளா வேளைக்குப் பசியடங்கும். மாடிப்படியில் அடியரவம் கேட்டது. கட்டிலிலிருந்து குதித்தெழுந்து முன்னறைக் குப் போனேன். பார்வதி மேலே ஏறி வந்து கொண் டிருந்தாள். புன்னகை தவழும் முகம்.

நானும் பெருமகிழ்ச்சி கொண்டேன். ஆனால் அதற்குக் காரணம் படியேறி வரும் பார்வதி மட்டு மல்ல. ஏன், அவள் அல்ல என்றே சொல்லிவிடலாம். அவள் எடுத்து வந்த டிபன்-காரியர்தான் எனக்கு பாலைவனத்திலே எதிர்ப்பட்ட பசுஞ்சோலை போலிருந் தது! நானே பாதிப் படிகளைத் தாண்டி அந்த டிபன் காரியரை 'லபக்'கென்று பற்றி யெடுத்தேன். அறைக்கு வந்து ஸோபாவில் உட்கார்ந்து எதிரிலிருந்த சிறிய மேஜைமேல் அதை வைத்துத் திறந்தேன். பாரு எனக் கெதிரில் உட்கார்ந்து கொண்டு வைத்த கண் வாங்கா மல் என்னையே பார்க்க ஆரம்பித்தாள். ஆறு லட்டுக்கள், எட்டு பூரி, கால் வீசை உருளைக்கிழங்கை ஒன்றன்பின் ஒன்ருக உள்ளே அனுப்பிய பிறகுதான் எனக்கு உயிர் வந்தது. பாருவின் நிலாப் போன்ற முகத்தை அப்புறம் தான் பார்த்தேன், ரஸனையுடன். ஒரு பெரிய டம்ளர் ஜலத்தையும் பருகிவிட்டு அவள் கண்களை நன்றிப் பெருக்குடன் உற்று நோக்கினேன்.

"ரொம்பப் பிரமாதம் பாரு! நீ தயாரித்தவையா?"

"ஆமாம்...எல்லாம் இந்த ராஜாவுக்காக அடியாள் கைப்படத் தயாரித்தது!"

"உன் பேச்சு லட்டு—பூரியைக் காட்டிலும் நன்ருயிருக்கிறது, பாரு!"

"அடடே, அது தெரிந்திருந்தால் இதையெல்லாம் எடுத்து வராமல் கொஞ்சநேரம் பேசிவிட்டுப் போயிருப்பேனே?"

"அவ்வளவுதான்...இந்த ராஜா மண் கூஜா போல் உடைந்து விடுவார்."

அவள் ஏதும் பதில் சொல்வதற்குள் டெலிபோன் மணியடித்தது.

"ஹலோ......பரசுராம் பேசுகிறேன்."

"நான் யார் தெரிகிறதா?" என்று கேட்டது மறு முனையிலிருந்து ஒரு பெண் குரல். ஆனுல் எவ்வளவு யோசித்துப் பார்த்தும் யாரென்று பிடிபடவில்லை.

"ஊஹூம், தெரியவில்லை."

"ஆனுனப்பட்ட பரசுராமே தோற்றுவிட்டார் என்பதை ஒப்புக் கொள்ளுங்கள்."

"யானைக்கும் அடி சறுக்குமே...நான் யானை அல்ல என்பதை நீங்கள் ஒப்புக்கொள்ள மாட்டீர்களா?"

"ம்.........பாரிஜாதம் பேசுகிறேன். அதற்குள் மறந்து விட்டீர்களே! என்னை நீங்கள் தேடியதாகத் தெரிந்தது. என்னவென்று கேட்கத்தான் போன் செய்கிறேன்."

திடீரென்று ஏதோ உறையில்லாத மின்சாரக் கம்பியைத் தொட்டு 'ஷாக்' வாங்கிக் கொண்டது போன்ற உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று.

"எங்கிருந்து பேசுகிறீர்கள்? மீனுக்ஷி ஹோட்டலிலிருந்தா?" என்று கேட்டேன்.

"இல்லை. வேறு இடத்திலிருந்து."

"உங்களுடன் அவசரமாகப் பேச வேண்டும். எங்கிருக்கிறீர்கள் என்பதைத் தெரிவியுங்கள்."

"ஜார்ஜ் டவுனில் ஜமுனுபாய் பில்டிங்ஸில் இருக்கிறேன். இங்கே வருகிறீர்களா? 325-ம் நம்பர் அறை."

"அங்கேயே இருக்கிறீர்களா? நான் இப்பொழுதே புறப்பட்டு வருகிறேன்."

"நீங்கள் வரும் வரையில் எங்கேயும் போக வில்லை."

ரிஸீவரை வைத்துவிட்டு அடுத்த அறைக்குப் போய் உடை மாற்றிக் கொண்டேன். முன் அறைக்கு வந்தேன். பார்வதி வருத்தமாய், "ஏன் இதற்குள் போக வேண்டுமா?" என்று கேட்டாள்.

"போகாமல் இருக்கவே முடியாது பாரு. அந்தப் பாரிஜாதத்தை உடனே பிடிக்க வேண்டும். கிருஷ்ணையா வுக்கு, பாவம், உடம்பு சரியில்லை. சரி, நான் வரட்டுமா?" என்று உத்தரவு கேட்டேன்.

"நீங்கள் போய் வாருங்கள். நான் இங்கேயே இருந்து சமையலைக் கவனிக்கிறேன்" என்றாள் பாரு.

என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. என்னை ஏன் தான் இப்படி நேசிக்கிறாளோ? அவள் இரு கைகளையும் பற்றி என்னருகில் இழுத்தேன். அவள் கண்களில் ஓர் ஒளி தோன்றியது; உதடுகள் இன்பத்தோடு துடித்தன. வெவ்வேறு திசைகளில் இழுத்துச் செல்லப்படும் இரு ரெயில் பெட்டிகளைப் போல் அடுத்த கணம் பிரிந்தோம். படிகளை இரண்டே எட்டில் தாவிக் கடந்து, லாம்ப்ரெட்டாவில் ஏறி, ஜார்ஜ் டவுன் ஜமுனா பாய் பில்டிங்ஸை நோக்கி வெறி பிடித்தவன் போல் வேகமாகப் பறந்தேன்.

அது ஆறடுக்குக் கட்டிடம். நூற்றுக் கணக்கான குடும்பங்கள் சிறு சிறு ஜாகைகளில் வசித்து வந்தன. படியேறிக் களைப்புடன் ஐந்தாவது மாடியிலிருந்த 325-ம் நம்பர் அறைக்குச் சென்றேன். என் கண்களை என்னால் நம்ப முடியவில்லை. அறை பூட்டியிருந்தது. வராந்தாவில் சற்று நடந்தேன். ஒரு வேலையாள் எதிர்ப்பட்டான். அவனை 325-ம் நம்பர் அறைமுன் அழைத்து வந்தேன்,

"உன் பெயரென்ன?" என்று விசாரித்தேன்.

"கந்தன், ஸார்."

"இந்த அறையில் யார் தங்கியிருப்பது?"

"வசந்தம்மாள், ஸார்."

"இப்போது அந்த அம்மாள் எங்கு போயிருக்கிருள்?"

"தெரியாது ஸார். நேற்று இரவு முதல் ரூம் பூட்டித்தான் இருக்கிறது."

என் வியப்பு அதிகரித்தது. "ஆமாம், இந்த வசந்தம்மா இப்படி ரூமைப் பூட்டிக் கொண்டு அடிக்கடி எங்காவது போவது வழக்கமா?"

"வழக்கம் தான்."

"இந்த வசந்தம்மாளுக்குக் கணவன், குழந்தை குட்டிகள் உண்டா?"

"அது தெரியாது. இங்கே தனியாகத்தான் தங்கியிருக்கிருர்கள்."

யார் இந்த வசந்தம்மாள்?—பாரிஜாதம் எதற்காக இவள் விலாசத்தைத் தந்தாள்? அதுவும் தாளுகப் போனில் கூப்பிட்டு. ஒருவேளே வசந்தம்மாள் தான் பாரிஜாதமோ? மீளுக்ஷி ஹோட்டலில் பாரிஜாதம் என்ற பெயரில் ஓர் அறை எடுத்துக் கொண்டிருக்கிருளா? என் தலே சுற்றியது...தலேகால் புரியவில்லே.

"ஒரு சுத்தியல் கொண்டு வா" என்றேன் கந்தனிடம்.

வியப்பால் அவன் கண்கள் விரிந்தன.

"எதற்கு ஸார்? பூட்டை உடைத்துக்கொண்டு உள்ளே போகவா? நீங்கள் அப்படிச் செய்தால் எனக்கு வேலே போய்விடும்" என்று மன்ருடிஞன்.

"இந்த வேலே போனுல் இன்னென்று நான் தருகிறேன். உடனே போய்ச் சுத்தியலேக் கொண்டு வா" என்று தீர்மானமாகக் கூறினேன்.

ஓர் அங்குலம்கூட நகராமல் அப்படியே மரம் போல் நின்ருன். எனக்குக் கோபம் வந்துவிட்டது. அருகில் போய் அவன் சட்டைக் காலரைப் பிடித்து உலுக்கினேன்.

"கொஞ்ச நாட்களுக்கு முன் இப்படித்தான் ஒருவன் நான் சொன்னதைச் செய்யாமல் நின்ருன். இப்போது அவன் வாயிலிருப்பது பூராவும் பொய்ப்பற்கள்!" என்று தெரிவித்தேன்.

பயத்தால் அவன் முகம் கன்றியது. மறுவார்த்தை பேசாமல் போய் ஒரு சுத்தியலைக் கொண்டு வந்து கொடுத்தான். அதைக் கொண்டு தாக்கிப் பூட்டை உடைத்தேன். கதவைத் தள்ளிக் கொண்டு உள்ளே நுழைந்தேன். ஒரே இருட்டாயிருந்தது. ஸ்விட்ச் இருந்த இடம் தெரியவில்லை. கந்தன் வந்து விளக்கைப் போட்டான்.

சிறிய அறை. அதை ஒட்டியிருந்த இன்னேர் அறைக்குள் போனேன். அங்கேயும் கந்தன் வந்து விளக்கைப் போட்டான். உடனேயே ஏதோ பாம்பின் மேல் காலை வைத்து விட்டவன்போல் எகிறிக் குதித்தான். 'கிரீச்'சென்று கூச்சலிட்டான். தரையில் மயங்கி விழுந்தான். நானும் திரும்பிப் பார்த்தேன். ஆம்; அறை நடுவில் தரையில் ஒரு பெண்மணியின் உயிரற்ற உடல் கிடந்தது. யாரும் அடையாளம் கண்டுகொள்ள முடியாதபடி அவள் முகம் பயங்கர மாகச் சிதைக்கப்பட்டிருந்தது. என் வாழ்நாளில் அது வரை எத்தனையோ பிணங்களை நான் பார்த்திருந்த போதிலும் இப்போது இப்படிக் கந்தனின் காலில் இடறிய இந்த உடலைக் கண்டபோது எனக்கு வேர்த்து விட்டது. கந்தனை முதலில் எடுத்து ஆஸ்வாசப்படுத்தி உட்கார வைத்தேன். பிரக்ஞை வந்தது. "கந்தா... பயப்படாதே. இது யாருடைய உடல் தெரிகிறதா?" என்று ஆறுதலும் கூறி விசாரணையும் நடத்தினேன்.

"வசந்தம்மாளுடையது, ஸார்" என்ருன். நாக் குழறியது; பல் வரிசைகள் தாளம் போட்டன.

உடனேயே முதலில் நுழைந்த முன் அறைக்குப் போனேன். கந்தன் பின் தொடர்ந்தான்.

"கந்தா...நீ இங்கேயே நில். ம்...டெலிபோன் எங்கே யிருக்கிறது, சொல்" என்றேன்.

"வராந்தாக் கோடியில் ஸார்."

போனைக் கண்டுபிடித்து இன்ஸ்பெக்டர் நாயரின் நம்பரை 'டயல்' செய்தேன்.

"ஹலோ...நாயர் பேசுகிறேன்."

"நாயர் பாய். பரசுராம் இங்கே...இரண்டு நிமிஷங்களாயின, இன்னெரு பிணத்தைக் கண்டு

பிடித்து. உடனே வாருங்கள்'' என்று தகவல் தந்தேன்.

"அட ஆண்டவனே...இன்றையப் பொழுதில் இன்னொன்று...ம்...ஒன்று...இரண்டு...இப்போது கொலை மூன்று''—நாயர் வியந்தாரா, விசனித்தாரா?

"ஆமாம். கொலை மூன்று'' என்று ஆமோதித்தேன்.

"எங்கே யிருக்கிறீர்கள் ப்ரதர்?'' என்றார்.

"ஜார்ஜ் டவுன் ஜமுனா பாய் பில்டிங்ஸ்...325-ம் நம்பர் அறை. இங்கேயே காத்திருப்பேன்.''

ரிஸீவரை வைத்துவிட்டு அறைக்குச் சென்றேன். இதற்குள் அங்கு பலபேர் கூடிவிட்டார்கள். இடித்துத் தள்ளிக் கொண்டு உடலுக்கருகில் போனேன். சில பேர் அருகில் நின்று உடலைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"ஒன்றையும் தொடாதீர்கள்'' என்று எச்சரித்தேன். கூட்டத்தில் வீரனைப்போல் தோற்றமளித்த ஒருவனைப் பொறுக்கி, "இது யார் தெரியுமா?'' என்று கேட்டேன்.

எல்லோருமே கோஷ்டி கானமாகப் பதிலளித்தார்கள். "வசந்தம்மா, ஸார், வசந்தம்மாவே தான்!''

உடன் குடியிருந்தவர்கள் அந்தக் கட்டிடவாசிகள். வசந்தம்மா என்று ஒரு முகமாக அடையாளம் கண்டு கொண்டு விட்டார்கள். ஆனால் இவ்வளவு குறுகிய நேரத்தில், பார்த்ததுமே 'இது வசந்தம்மா' என்று எப்படி அடையாளம் கூறினார்கள்?

உடலையே சில நிமிஷ நேரம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு கூட்டத்தினரிடம் கேட்டேன் "இது வசந்தம்மா என்று எப்படிக் கண்டீர்கள்?''

அவர்கள் பின்வாங்கவில்லை. நடுத்தர வயதுள்ள ஒரு மாது முன்வந்து, "அந்தப் புடவை வசந்தம்மாவுடையது. பல தடவைகள் இதை உடுத்திக் கொண்டு வசந்தம்மா போய்வருவதை நான் பார்த்திருக்கிறேன்'' என்றாள்.

"அந்த ஜாக்கெட்டும் வசந்தம்மாவுடையது தான். இரண்டு மூன்று நாட்களுக்கு முன்தான் என் ஜாக்கெட்டும் இதுவும் சலவையில் கலந்து போய்விட்டன" என்ருள் இன்னெரு மாது.

"ஓ, அந்தச் செருப்பைப் பார்த்ததும் யாரும் சொல்லிவிடலாமே! இதுபோலச் செருப்பை வாங்கிக் கொடுக்கும் வரையில் என் மனைவி சாம்பாருக்கு உப்புப்போட மறந்து கொண்டே யிருந்தாள்" என்ருர் ஒரு குடும்பஸ்தர்.

நான் பேசவில்லை. மௌனமாக நின்றபடியே அவர்கள் சொல்வதை யெல்லாம் காதில் வாங்கிக் கொண்டேன். உடல் மீதிருந்த பொருள்கள் எல்லாம் வசந்தம்மாளுடையவை. அதனுல் இது வசந்தம்மாவின் உடல் என்று கூட்டத்தினர் குரலோடு குரலாகக் 'கோவிந்தா' போட்டு விட்டார்கள். ஆனுல் ஒரு சந்தேகம் என்னை அரித்துக் கொண்டிருந்தது. அடையாளத்தைச் சுட்டிக் காட்டும்படியாக வசந்தம்மாவின் பொருள்கள் எல்லாம் உடல்மீதிருக்க, அவள் முகத்தை மட்டும் ஏன் உருத்தெரியாமல் சிதைக்க வேண்டும்? இதில் நிச்சயம் ஏதோ ரகஸ்யம் இருக்கிறது. மக்களை ஏமாற்றும் வேலை.

இது வசந்தம்மாவின் உடலேயல்லவென்ற எண்ணம் என்னுள் வலுத்தது. வசந்தம்மாவின் பொருள்களையெல்லாம் சுமந்து கிடக்கும் இந்தப் பிணம் வேறு யாருடையதாகவாவது இருக்குமெனத் தோன்றியது.

"கந்தா...வசந்தம்மாவைப் பார்க்க இங்கு யாராவது வந்து போவார்களா?" என்று கேட்டேன்.

"நிறையப்பேர் வரமாட்டார்கள். ஆனுல் ஒரு ஸ்திரீ அடிக்கடி வருவாள்."

"அவள் பெயர் தெரியுமா?"

"பாரிஜாதம் அம்மாள்...ஒரு நாள் அந்த அம்மாள் வந்தபோது வசந்தம்மாள் இல்லை. அப்போதுதான் தனது பெயரை என்னிடம் சொல்லி வசந்தம்மாள் வந்ததும் தகவல் தெரிவித்துவிடச் சொன்னுர்கள். வசந்தம்மாளும் அந்த அம்மாவும் முன்பு இந்த ஊரில் சேர்ந்து வாழ்ந்தார்களாம்."

"ஸ்ரீமதி பாரிஜாதம் வேறு ஏதாவது சொன்னாளா?"

"இல்லை. ஆனால் இரண்டு மூன்று தடவைகள் அந்த அம்மாள் இங்கே வந்து பேசிப் போனதை நானே பார்த்திருக்கிறேன்."

"கடைசியாக எப்போது வந்தாள்? நினைவு இருக்கிறதா?"

"இப்போது நினைவு வருகிறது. நேற்று மாலை பாரிஜாதம் அம்மாள் வந்தார்கள். இருவரும் சிறிது நேரம் அறையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்."

"அப்புறம் பாரிஜாதம் வெளியே திரும்பிப் போவதைப் பார்த்தாயா?"

"இல்லை, ஸார்."

"வசந்தம்மாள் இந்த ஹோட்டலில் அறையெடுத்துக் கொண்டு எத்தனை நாட்களாகின்றன?"

"சமீபத்தில்—ஒரு வாரத்திற்கு முன்புதான் இந்த அறையை எடுத்துக் கொண்டார்கள்."

இன்ஸ்பெக்டர் நாயரின் பூட்ஸ் ஒலி கேட்டது. ஜவான்களும் வந்தார்கள்.

நாயர் உள்ளே வந்ததும் நான் "நாயர் பாய். இங்கே இருப்பதை அப்படியே பார்த்துக் கொள்ளுங்கள். நான் வெளியே போய்விட்டு உடனே திரும்புகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியேறினேன்.

சில விநாடிகளில் எனது லாம்ப்ரெட்டா மீனாக்ஷி ஹோட்டலை நோக்கித் தெருக்களை விழுங்கிக் கொண்டு ஓடியது.

## 6

ஓடும் லாம்ப்ரெட்டாவில் அமர்ந்து கொண்டிருந்த எனது எண்ணங்களும் ஓடின. ஸ்ரீமதி பாரிஜாதம் ஒரு விசித்திரமான பெண்மணியாகத் தோன்றினாள். ஒன்று, இரண்டு, மூன்று கொலைகள் நிகழ்ந்து விட்டன. இவை மூன்றிலும் பாரிஜாதத்தின் பெயர் அடிபட இடம் இருந்திருக்கிறது. இன்று டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் பாரிஜாதம் போயிருக்கிறாள். அவர் இறந்துவிட்டார். சொக்கநாதனுடன் ஏதோ

தொடர்புபூண்டிருக்கிருள். அவரும் டாக்டர் கிருஷ்ண ஸ்வாமியைச் சந்திக்க வேறு உலகம் போய்விட்டார்! அவள் வசந்தம்மாளின் சிநேகிதி என்று கந்தன் சொல்கிருன். நேற்றுக் கூட வசந்தம்மாளைப் பார்க்க வந்தாளாம். இப்போது வசந்தம்மாள் அறைக்குள் ஒரு சவம் கிடக்கிறது. பாரிஜாதம் அடி வைத்த இடமெல்லாம் பிணங்கள் முளைக்கின்றன. இவ்வளவுக்கும் இடையில் அவள் காற்றைப்போல் மறைந்து விட்டாள். ஒவ்வொன்றையும் நினைத்துப் பார்க்கப் பார்க்க சந்தேகம் அவளையே சுற்றி வலை பின்னியது.

ஹோட்டலுக்கு முன் லாம்ப்ரெட்டாவை நிறுத்தி விட்டு ஹாலுக்குள் புகுந்தேன். அங்கு நின்று கொண்டிருந்த ஜவான் 'சலாம்' வைத்தான். "இன்னும் வரவில்லை" என்று தகவலும் தந்தான்.

முதலில் நான் அங்கு வந்தபோது ட்யூடியில் இருந்த குமாஸ்தா இப்போதும் இருந்தார். எனக்கு வணக்கம் தெரிவித்தார்.

"ஸ்ரீமதி பாரிஜாதம் எங்கே போயிருக்கிருள், தெரியுமா?" என்று கேட்டேன்.

"தெரியாது, ஸார். நீங்கள் பார்த்துப் பேசிவிட்டுப் போனதும் வெளியே போனுர்கள். அறைச்சாவியைக் கொடுத்து விட்டுப் போனுர்கள். அதனுல் மறுபடி வருவார்களென்று நம்புகிறேன்" என்று பதில் தந்தார்.

"அந்தச் சாவியை என்னிடம் கொடுங்கள்."

அவர் முதுகுப்புறம் இருந்த சுவரில் ஒரு மரப் பலகையில் நிறைய இரும்பு முளைகள் இலக்கமிட்டு இருந்தன. ஒவ்வொன்றிலும் ஒரு சாவி மாட்டியிருந்தது. ஒரு சாவியை எடுத்து என்னிடம் தந்தார். அதோடு, "நீங்கள் அந்த அறைக்குப் போவதானுல் நானும் வர விரும்புகிறேன்" என்ருர்.

"பேஷாக வரலாம்" என்றேன். இருவரும் முதல் மாடியில் பத்தாம் நம்பர் அறைக்குப் போனேம். பூட்டைத் திறந்து கொண்டு உள்ளே நான் முதலில் நுழைந்தேன். அவர் என் பின்னுல் வந்தார்.

சிறிய அறைதான். அத்துடனேயே இணைக்கப் பட்ட பாத்-ரூம். அறையில் அவள் பொருள் எதுவுமே தென்படவில்லை. காலியாக இருந்தது.

"அட கடவுளே! அந்த அம்மாளின் பொருள்கள் எதையுமே காணுமே! எப்போது எப்படி எடுத்துச் சென்றூர்கள் தெரியவில்லையே" என்று அதிசயித்தார் குமாஸ்தா.

"அவள் வெளியே செல்லும்போது எதையும் எடுத்துப் போகவில்லையே?"

"கிடையாது, ஸார். நான்தானே பார்த்துக் கொண்டிருந்தேன்?"

"அவள் போகும்போது அதேசமயம் இந்த மாடியில் வேறு யாராவது அறையைக் காலி செய்தார் களா?"

"ஆமாம்......9-ம் நம்பர் அறைக்காரர் காலி செய்துவிட்டுப் போனூர்."

இப்போது எனக்கு எல்லாம் புரிந்தது. 9–ம் நம் பர் அறையிலிருந்தவர் அவளுக்கு உடந்தை. அங்கே எல்லாச் சாமான்களையும் கொண்டு வைத்து விட்டு, ஏதோ வெளியில் போய் வருபவளைப் போல பாரிஜாதம் சாவியைக் கொடுத்துவிட்டுப் போய் விட்டாள். சற்று நேரத்துக் கெல்லாம் அவளுடைய பொருள்களையும் சேர்த்து எடுத்துக் கொண்டு 9-ம் நம்பர் அறையிலிருந்த வர் போய் விட்டார். பாரிஜாதத்தின் மீது என் சந்தேகம் ஸ்திரமாகப் பதிந்தது. ஆனுல் கல்கத்தா சேவா சங்கக் காரியதரிசி அவளைப் பற்றி மிகவும் சிலாக்ய மாகப் பேசினுரே! அவ்வளவு குணச்சிறப்பு படைத்த ஒரு பெண்மணி இப்படி இரகஸ்யமாக வெளியேறுவா னேன்? ஒரு சமூக சேவகி மூன்று உயிர்களை, 'போதும் உங்கள் பூலோக வாசம்' என்று முடித்து அனுப்பு வாளா?

அறையைச் சோதிக்கும் நோக்கத்துடன் துழாவி னேன். சில கிழிந்த காகிதத் துண்டுகள் கிடந்தன. அவற்றை ஒன்று சேர்த்துப் பார்த்தேன். இரண்டு துண்டுகள் சரியாய்ச் சேர்ந்து ஒரு முழுப் பக்கமாயின. அது அயல் நாடுகளுக்குச் செல்வதற்கான பிரயாண

அனுமதிப் பத்திரத்தின் ஒரு பக்கமென்று உணர்ந்தேன். பாரிஜாதம் என்ற பெயர் மேலே யிருந்தது. அந்தப் பக்கத்தின் மீது கண்களையும் கருத்தையும் ஊன்றிய என் மனத்தில் ஏதோ சுடர் போலப் பிரகாசித்தது. அதிலிருந்த ஒரு வாசகமே இதற்குக் காரணம். பத்திரமாக இரண்டு துண்டுகளையும் பைக்குள் போட்டுக் கொண்டேன்.

"அறையைப் பூட்டலாமா?"—குமாஸ்தா என் சிந்தனைப் போக்கில் குறுக்கிட்டு விட்டார்.

பதிலே கூறாமல் வெளி வந்தேன். வில்லிலிருந்து விடுபட்ட அம்புபோலக் கீழே தாவி இறங்கினேன். லாம்ப்ரெட்டா மறுபடி ஜமுனா பாய் பில்டிங்ஸை அடையப் பறந்தது.

அறையில் கிடந்து அகப்பட்ட அந்தக் காகிதத் துண்டுகளில் நான் அதிக நம்பிக்கை வைத்தேன்.

லாம்ப்ரெட்டாவிலிருந்து இறங்கிப் படியேறி 5-ம் மாடி 325-ம் நம்பர் அறையை அடைந்தேன், போலீஸ் டாக்டர் சவத்தைச் சுற்றி சுற்றி வந்து பரிசோதித்துக் கொண்டிருந்தார். எல்லோர் கண்களும் என்மீது புரண்டன. வழியில் இருந்தவர்களை ஒதுக்கி விட்டு பிணத்தினருகில் போனேன். குனிந்து ஜாக்கெட்டைச் சற்று கீழே தள்ளினேன். கழுத்துக்குச் சற்று கீழே தள்ளி அரை ரூபாய் நாணய அளவில் ஒரு மச்சம் இருந்தது. என்னால் குதூகலத்தை அடக்க முடியவில்லை. காற்றிலேறி வீரர்களையும் தொட்டு வரலாம் போலிருந்தது. நாயரிடம் ஓடிச் சென்று அவரைக் கட்டித் தழுவினேன்.

"நாயர் பாய். பாரிஜாதத்தைப் பிடிக்க நீங்கள் எவ்வளவு ஜவான்களை எங்கெங்கே நிறுத்தி வைத்து முயன்றாலும் யாராலும் அவளைப் பிடிக்க முடியாது" என்றேன்.

"ஏன்?" என்று கேட்கும் பாவனையில் என்னைப் பார்த்தார் நாயர். ஆனால் ஊமையாக நின்றார்.

"ஏனென்றால் இதோ இறந்து கிடப்பது தான் ஸ்ரீமதி பாரிஜாதம்" என்று அழுத்தந்திருத்தமாகச் சொன்னேன்.

அறையிலிருந்தவர்கள் சிலையானர்கள். டாக்டர் பக்கம் திரும்பி, "நீங்கள் இந்தப் பிணத்தைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"முறைப்படியான பரிசோதனைகள் செய்யாமல் முழு விவரமும் சொல்வதற்கில்லை. ஆனல் விஷத்தால் இறந்திருக்கிருள் என்றும், இறந்து 24-மணி நேரத்திற் குக் குறையாமல் ஆகி விட்டதென்றும் நிச்சயம் சொல் வேன். உயிர் போனபின் தான் முகம் சிதைக்கப் பட்டிருக்கிறது" என்ருர் போலீஸ் டாக்டர்.

நான் ஒரு முறை ஆழ்ந்து சுவாசித்தேன். அப்போது தான் வானமும் வையமும் இருள் கூட்டின. என் மனத் தில் சில உண்மைகள் மின்மினிப் பூச்சிகளைப் போல் ஒளி உமிழ்ந்தன.

"நாயர் பாய், நான் வருகிறேன். வேறு சில முக்கிய விவரங்களைச் சரி பார்த்தாக வேண்டும்" என்று கூறிக் கொண்டே அந்த அறையிலிருந்து அகன் றேன்.

## 7

டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் பங்களாவில் போய் நின்றது லாம்ப்ரெட்டா. காலையில் கலகலப்பாக இருந்த இடம் இப்போது வெறிச்சோடிக் கிடந்தது. எதற்காக இப்போது இங்கே வந்தோம் என்று எனக் குப் புரியவில்லை. சில சமயங்களில் இப்படித்தான் சிந்தனை ஆராய்ந்து அனுமதி தராமலே சில காரியங் களைச் செய்து விடுகிறேம். அவற்ருல் நன்மையும் நேரலாம். தீமையும் சம்பவிக்கலாம். இப்போது என் எண்ணங்கள்தாம் லாம்ப்ரெட்டாவை இங்கு கொண்டு வந்து விட்டன போலும்! நன்மை விளையுமா?

விஸிட்டர்கள் அறையில் புகுந்தேன். ஒரு மின் சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஸோபாக்கள் காலியாய் இருந்தன. இடது பக்கம் தாழ்வாரத்தில் காதல் நாடகத்தில் ஒரு காட்சி நடந்து கொண்டிருந்தது. என் பூட்ஸ் சப்தம் கேட்டு அந்த இரண்டு புருக்களும் பிரிந்தது எனக்கு வருத்தமாக இருந்தது. ஏதோ அவசர அழைப்பு வந்தது போல் சுந்தரம் லிப்ஃடில் ஏறி மேலே சென்ருன். அந்த சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் நான்

தாழ்வாரத்திற்குச் சென்று, அச்சத்தாலும் நாணத் தாலும் அப்பால் போய்க் கொண்டிருந்த லக்ஷ்மியைக் கூப்பிட்டேன். அவள் குழப்பத்துடன் குனிந்து கொண்டு நின்ருள்.

"லக்ஷ்மி! நான் பகலில் உன்னைச் சந்தித்துப் பேசியபோது என்னிடம் ஏதோ சொல்ல விரும்பிச் சொல்லாமல் நிறுத்திக் கொண்டு விட்டாயே, அது என்ன?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை, ஐயா."

"லக்ஷ்மி, நான் இப்பொழுதுதான் ப்ரமீளாவைப் பார்த்துப் பேசிவிட்டு நேரே இங்கு வருகிறேன். அவள் எல்லாவற்றையும் சொல்லி விட்டாள். நீ சுந்தரத்தைக் காப்பாற்ற முயல்கிருய்" என்று குற்றம் சாட்டினேன்.

லக்ஷ்மி சிலையாய்ச் சமைந்து போனுள். ஆனுல் வாய் திறக்கவில்லை.

"ப்ரமீளா சொன்ன தகவல்களிலிருந்து சுந்தரம் எப்படிப்பட்டவன் என்பது எனக்குத் தெரிந்து விட்டது" என்றேன்.

"ப்ரமீளா சொல்வதை நம்பிவிடாதீர்கள். அவள் இப்படிப்பட்டவள் என்பது தெரிந்திருந்தால் நான் பார்த்ததை யெல்லாம் சொல்லியிருப்பேனே! அவள் மனதைப் புண்படுத்த வேண்டாம் என்று நான் பேசாம லிருந்தேன். ஊம்...,இது நல்லதற்குக் காலமில்லை."

"நீ சொல்வது சரி. ஆமாம். நீ என்ன பார்த் தாய்?"—தந்திரம் பலித்துவிட்ட சந்தோஷத்தில் விசாரணையைத் தொடர்ந்தேன்.

"காலையில் நான் கூறவில்லை. அவன்மீது இரக்கம் கொண்டேன், ப்ரமீளாவின் காதலனுயிற்றே என்று. எப்போது எவள் என் சந்தோஷத்திற்கு உலைவைக்க முனைந்து விட்டாளோ அவளுக்காக நான் மட்டும் ஏன் பச்சாதாபப் படவேண்டும்? பகல் 12-மணி சுமாருக்கு மூன்றும் மாடி வராந்தாவில் நின்று கொண்டிருந்தேன். நடுவில் படிக்கட்டுப் பக்கம் ஒரு தடவை திரும்பினேன். அங்கு தக்ஷிணுமூர்த்தி பதுங்கிக் கொள்ள முயல்வதைப் பார்த்தேன். 2-ம் மாடியிலுள்ள

டாக்டரின் அறையைப் பார்த்து ஆந்தையைப் போல விழித்துக் கொண்டிருந்தான். ஏன் அப்படி ஒளிந்தானென்று எனக்குக் காரணம் விளங்கவில்லை. ப்ரமீளா இன்று வரவில்லையென்று சொல்ல விரும்பினேன். ஆனால் அப்புறம் ஏனோ அது தேவையில்லை யென்று தோன்றியது.''

''தக்ஷிணுமூர்த்தி அதன் பிறகு டாக்டர் அறைக்குள் போனுன்?''

''ப்ரமீளாவைப் போல் எனக்குப் பொய் சொல்லத் தெரியாது, ஐயா. தக்ஷிணுமூர்த்தி டாக்டர் அறைக்குள் போவதை நான் பார்க்கவில்லை. அம்மா உள்ளே கூப்பிட்டதால் நான் போய்விட்டேன். மறுபடி வராந்தாவுக்கு வந்தபோது அவனைக் காணும்.''

நான் மகிழ்ச்சியுடன் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தேன்.

''நீங்கள் இவரைச் சந்தேகிக்கிறீர்களா?'' என்று கேட்டாள் அவள் லிப்ஃட் இருக்கும் பக்கம் சுட்டிக் காட்டி. சுந்தரத்தைக் குறிப்பிட்டாள் அவள்.

''இல்லை. நீ சொன்னதைக் கேட்டதும் ப்ரமீளாவின் கட்டுக் கதைகளில் நான் நம்பிக்கை இழந்து விட்டேன்'' என்றேன்.

லாம்ப்ரெட்டா தார் ரஸ்தாவில் தங்கு தடையின்றி ஓடிக்கொண்டிருந்தது. என் மனம் கடல் போலப் பொங்கிக் கொண்டிருந்தது. என் எண்ணங்கள் அந்தக் கடல் வெளியில் சிறு சிறு மீன்களைப்போல் துள்ளிக் கொண்டிருந்தன. ஒன்று, இரண்டு, கொலை மூன்று. குளிர் வீசுவது போல் நான் நடுக்கமுற்றேன். இன்னும் எத்தனை உயிரற்ற உடல்கள் காத்திருக்கின்றனவோ! எதற்காக இத்தனை கொலைகள் நடக்க வேண்டும் என்று எனக்குப் பிடிபடவில்லை. டாக்டர் கிருஷ்ணஸ்வாமி—சொக்கநாதன்—பாரிஜாதம்...மூன்றும் ஒரே ஆசாமி நிகழ்த்திய கொலையா? யாருமே மூன்று கொலைகள் நிகழ்த்துவதென்றுல் அதற்கு மிக முக்கியமான ஏதோ அவசரம்—அவசியம் இருந்திருக்க வேண்டும். அது என்ன?

ராம்லால் மருந்துக் கடை எதிரில் லாம்ப்ரெட்டாவை நிறுத்தினேன். கடையில் நுழைகின்ற இடத்தில் இருந்த டெலிபோன் பெட்டிக்குள் புகுந்து ரிஸீவரை எடுத்தேன். 'எக்ஸ்சேஞ்சு'க்கு நம்பரைச் சொன்னேன் ஒரு நிமிஷத்தில் "இரண்டு ஒரு அணு நாணயம் போடுங்கள். என்று குரல் வந்தது. போட்டுவிட்டுப் பேசினேன்.

"ஹலோ...யார் பேசுவது?" என்று கேட்டது ஒரு பெண் குரல் மறு முனையிலிருந்து.

கேல்கர் போல் குரலை மாற்றிக்கொண்டு உணர்ச்சிப் பாசாங்குடன் "நர்கீஸ்" என்றேன்.

"ஓ......கேல்கர்! யாரென்று கண்டுபிடித்து விட்டேன் பார்த்தீர்களா? என்ன செய்கிறீர்கள்? இப்போது தான் உங்களுக்கு போன் செய்ய வந்தேன். டெலிபோன் மணியும் அடித்தது. உடனே புறப்பட்டு இங்கே வாருங்கள். மாமா இப்போதுதான் காரில் ஆவடி போயிருக்கிறார்."

"ஆவடிக்கா?"

"ஆமாம். ஆவடியில் அவருக்குப் பெரிய வீடு இருக்கிறதென்று நான் சொன்னதில்லையா? இதற்குள் மறந்து விட்டீர்களா? இப்படியேதான் இந்த நர்கீஸை யும் மறந்துவிடுவீர்கள்!"

"அது ஒரு நாளும் நடக்காது, நர்கீஸ்! என் நினைவெல்லாம் இரவும் பகலும் எந்நேரமும் உன்மீதே பதிந்திருப்பதால் மற்றவையெல்லாம் எனக்கு மறந்து விடுகின்றன. இது தவறு?"

"இல்லை, கேல்கர்! அந்த அன்புக்கு நான் அருகதை யாயிருக்க வேண்டுமே என்றுதான் பயமாயிருக்கிறது. உடனே இங்கே வந்துவிடுங்கள்."

"நர்கிஸ்!—மாமா உன்னை ஆவடிக்குக் கூப்பிட வில்லையா?"

"அவர் அழைத்தாலும் நான் போவேனா? அவருக்கு என்ன, அங்கே கும்மாளம் போட ஒரு வேலைக்காரி இருக்கிறாள்."

"வேலைக்காரியா? அவளை நான் பார்த்திருக் கிறேனோ?"

"நானே ஒரு தடவைதான் பார்த்திருக்கிறேன். பதிமூன்று வருஷமாக அவள் அந்த ஆவடி வீட்டில் வேலை பார்க்கிறாளாம். எனக்கு முதல் தடவையாக அவள் முகத்தைப் பார்த்ததுமே வெறுப்பு மூண்டது."

என் மனத்தில் ஒரு விநோத எண்ணம் உதித்தது. கேல்கர் போலவே தொடர்ந்து கேட்டேன்:

"அவள் பெயர் பாரிஜாதமா?"

"இல்லை, இல்லை. பாரிஜாதம் என்பது வேறு ஒருத்தி. டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் ஆஸ்பத்திரியில் நான் அந்த பாரிஜாதத்தைப் பார்த்தேன். அன்று ஒரு விசித்திரமான சம்பவம் நடந்தது. உங்களிடம் நான் சொல்லவில்லையே?"

"ஊஹூம்."

"ஒரு வாரத்திற்கு முன் நானும் மாமாவும் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் போயிருந் தோம். இருவரும் காரிலிருந்து இறங்கி விஸிட்டர்களுக் கான அறையில் நுழைந்தோம். அப்போதுதான் அந்தப் பாரிஜாதம் உள்ளே வந்தாள். மாமாவைப் பார்த்ததும் அவள் மலைத்துப்போய் நின்று விட்டாள். அந்த சமயத் தில் டாக்டர் கூப்பிட்டனுப்பி விட்டதால் மாமா மேலே போய்விட்டார், மெதுவாக அந்தப் பாரிஜாதம் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். முப்பத் தைந்து வயதிருக்கும். நல்லவள் என்று பார்த்ததுமே தோன்றியது. புன்னகையுடன், 'வனஜா சௌக்கியமா?' என்று கேட்டாள்.

"யார் அது வனஜா? எனக்குத் தெரியாதே" என்றேன்.

"பதினைந்து வருஷங்களுக்கு முன் வனஜாவும் இந்தப் பாரிஜாதமும் சிநேகிதிகளாம். இருவரும் நாடகங்களில் சேர்ந்து நடிப்பார்களாம். அவள் சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டேன். மாமா வைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டாள். தெரிந்ததைச் சொன்னேன். சௌகர்யப்படும்போது வீட்டுக்கு வருவதாகக் கூறிப்போனாள். மாமாவும் நானும் காரில் வீட்டுக்குத் திரும்பும்பொழுது அவரிடம் எல்லாவற்றை

யும் சொன்னேன். 'யாரது எனக்குத் தெரியவே தெரியாதே' என்று ஆச்சரியப்பட்டார்.''

''அவள் அப்புறம் வீட்டுக்கு வந்தாளா?''

''ஒரே ஒரு தடவை வந்தாள். மாமாவோடு ஒரு மணி நேரத்துக்கு மேல் பேசிக்கொண்டிருந்தாள்.''

''நர்கீஸ்! நமக்கு ஏன் இந்த வம்பு தும்புகள்? அங்கே 'ரெடி'யாயிரு...இதோ சிட்டுக் குருவி போல் பறந்து வந்து விடுகிறேன்.''

'வேகமாய் வாராய்—கண்ணா என் வேதனை தீராய்' என்று நர்கீஸ் பாடும் குரல் கேட்டது டெலிபோனில்.

ரிஸீவரை வைத்தேன். சிகரெட்டில் புகையும், மனதில் எண்ணங்களும் சுழன்றன.

மறுபடி ரிஸீவரை எடுத்தேன். வேறு ஒரு நம்பர் கேட்டேன். வழக்கம் போல் இரண்டணா போட்ட பின் பேசலானேன்.

''ஹலோ'' என்றது ஒரு பெண் குரல்.

''ப்ரமீளா இருந்தால் கூப்பிடுங்கள்'' என்றேன். அரை நிமிஷம் காத்திருந்தேன். மறுபடி குரல் கேட்டது.

''ப்ரமீளா ஹியர்......யார் பேசுவது?''

''ஹிந்துஸ்தான் இறக்குமதி—ஏற்றுமதி கார்ப்பொரேஷனிலிருந்து பேசுகிறேன். தக்ஷிணாமூர்த்தியின் விலாசம் தேவை.''

''என்ன விஷயம்?''—குரலில் கவலை கலந்திருந்தது.

நான்கு நாட்களுக்கு முன் அவர் ஒரு வேலைக்கு விண்ணப்பம் தந்தார். சந்தர்ப்பம் இருந்தால் தனக்கு ஒரு முறை டெலிபோன் செய்யும்படி என்னிடம் கூறியிருந்தார். நாங்கள் இருவரும் நண்பர்கள்.''

''விண்ணப்பத்திலேயே அவர் தனது விலாசத்தைக் கொடுத்திருப்பாரே, பாருங்கள்.''

இது நான் எதிர்பாராத பதில். ஆனால் சமாளித்துக் கொண்டு, ''விண்ணப்பத்தை இப்போது நான் எடுத்துப் பார்ப்பதற்கு முடியாது. அது மேலே போயிருக்கிறது.

நண்பனென்ற முறையில் தகவல் தெரிவிக்க விரும்பு கிறேன்" என்றேன்.

"அப்படியானல் அவருக்கு அந்த வேலை கிடைக்குமா?"

"கண்டிப்பாக. சந்தோஷ சமாசாரத்தைச் சொல்லத்தான் விரும்பினேன்."

"ரொம்பவும் வந்தனம். நானே அவரிடம் அவசியம் தெரிவித்துவிடுகிறேன்."

இதுவும் நான் கொஞ்சமும் எதிர்பார்த்திராத பதில். ப்ரமீளா கெட்டிக்காரிதான்.

"சரி...உங்கள் இஷ்டம். நண்பன் வாயால் நல்ல சமாச்சாரத்தைச் சொல்வோமே என்று பார்த்தேன். அப்படியே டிபன், காப்பிக்கு அடிப்போட ஆசைப் பட்டேன்" என்று அங்கலாய்த்தேன். மூன்ருவது தடவையாக நான் எதிர்பார்க்காத பதில் கிடைத்தது.

"அப்படியானல் இதோ விலாசத்தைக் குறித்துக் கொள்ளுங்கள். 27, ராமையா தெரு, தியாகராய நகர். நீங்களே முதலில் சொல்லுங்கள். என்னிடம் தகவல் தெரிவித்தாகிவிட்டது என்பதையும் சொல்லி விடுங்கள்."

"வந்தனம். அடுத்த மாதம் முதல் தேதி சம் பளப் பணத்தைக் கறந்து வாங்கிக் கொண்டு விடுங் கள்" என்று கிண்டல் செய்துவிட்டு ரிஸீவரை வைத்தேன்,

ஒரு நிமிஷம் கழித்து ஜமுனு பாய் பில்டிங்ஸுக் குப் போன் செய்து இன்ஸ்பெக்டர் நாயர் வேண்டு மென்றேன். அவர் தமது வழக்கப்படியே நத்தை போல் ஊர்ந்து போனுக்கு வர இரண்டு மூன்று நிமிஷங் கள் ஆகிவிட்டன.

"இன்ஸ்பெக்டர் நாயர் ஹியர்" என்ருர் போலீஸ் இலாகாவுக்கே உரித்தான கம்பீரமான குரலில்.

"பாய். பரசுராம் பேசுகிறேன். இன்னும் அங்கேதான் இருக்கிறீர்களா?"

"இப்போதுதான் பிணத்தை ஆஸ்பத்திரிக்கு அனுப்பினேன். நான் இன்னும் சிறிது நேரத்தில்

நேரே ஸ்டேஷனுக்குப் போவதாயிருந்தேன். ப்ரதர்... வேறு சில புதிய விஷயங்களும் கண்டுபிடித்தேன்."

"அப்படியா? என்னென்ன?"

"சொக்கநாதன் மரணம் பற்றி எங்கள் டாக்டரின் அபிப்பிராயம் இப்போதுதான் கிடைத்தது. அவர் ஏதோ மாத்திரையை விழுங்கி யிருப்பதாகத் தெரிகிறது. வயிற்றில் 'ஆர்ஸெனிக்' பாஷாணம் அகப்பட்டதாம். மாத்திரை உட்கொண்டு ஒரு மணி நேரத்தில் அவர் உயிர் துறந்திருப்பாரென்று டாக்டர் சொல்கிறார்."

"மாத்திரையை யார் கொடுத்திருப்பார்கள்? அதுதான் ஆச்சர்யமாக இருக்கிறது."

"ஆச்சர்யம் என்ன ப்ரதர்...சொக்கநாதன் பகல் 12-30 க்கு டாக்டரின் அறைக்குள் போயிருக்கிறார். ஆகவே டாக்டர் கிருஷ்ணஸ்வாமிதான் மாத்திரையைக் கொடுத்திருக்க வேண்டும். அதனால் தான் சொக்கநாதன் தமது ஹோட்டல் அறையில் சுமார் இரண்டு மணிக்கு இறந்திருக்கிறார்."

"எனக்கு இந்தக் கேஸ் ஒரே சிக்கலாக இருக்கிறது பாய்."

"ப்ரதர்! சொக்கநாதன் பெரிய மனிதர்களின் இரகசியங்களைச் சேகரித்து வைத்துக் கொண்டு அவர்களைப் பயமுறுத்திப் பணம் பறிப்பவர் என்று கண்டு பிடித்தோம். பணம் பறிப்பதற்காகத்தான் அவர் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியிடம் போயிருப்பார். ஏதோ சாக்குச் சொல்வதற்காகக் காது குத்தலென்றே, தொண்டை இரணமென்றே சொல்லிக் கொண்டு போயிருப்பார். இந்த சந்தர்ப்பத்தை நழுவவிடக்கூடாதென்று டாக்டர் அவருக்கு விஷ மாத்திரையைக் கொடுத்திருப்பார். டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் வாழ்க்கையிலும் ஏதோ மர்மங்கள் இருக்க வேண்டும். அவற்றைக் கண்டுபிடிப்பது இப்போது நமது காரியம்" என்று விளக்கம் கூறினர் நாயர்.

"அப்படியானல் டாக்டரைக் கொன்றது யார்?"

"அவர் தற்கொலை செய்து கொண்டிருப்பார் ப்ரதர். சொக்கநாதன் விஷ மாத்திரையை உட்

கொண்டுவிட்டு வெளியே போனதும் டாக்டருக்கு தான் செய்த குற்றம் புலப்பட்டிருக்கும். மனச்சாட்சி விஸ்வரூபமெடுத்து அவரை விழுங்கி யிருக்கும்.''

''உங்கள் விளக்கம் அற்புதமாக அமைந்திருக்கிறது, பாய்!'' என்று பாராட்டினேன. ஆனால் டாக்டரைப் பயமுறுத்தப் போன சொக்கநாதன் அவர் தரும் மாத்திரையை உட்கொள்ளுவாரா என்ற அடிப்படைச் சந்தேகம் அகலவில்லை.

''இன்னொரு முக்ய சமாசாரம். இப்போது தான் தகவல் கிடைத்தது. இன்று பகல் வேளையில் தக்ஷிணாமூர்த்தி கவலையும் பரபரப்புமாய் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவந்தானும். ஒரு ஜவான் இதைப் பார்த்திருக்கிறன்.''

''என்ன நடந்தது அப்புறம்?'' என்று ஆவலுடன் கேட்டேன்.

''தக்ஷிணாமூர்த்தி ஆஸ்பத்திரியிலிருந்து வேகமாக வெளிவந்து தெருவைத் தாண்டப் போயிருக்கிறன். அப்போது தெருவின் ஒரு பக்கத்தில் பாதசாரிகளுக்கான நடைபாதையில் ஒரு ஜவான் போய்க்கொண்டிருக்கவே தக்ஷிணாமூர்த்தி கலவரத்தோடு தெருவில் வந்து போய்க் கொண்டிருக்கும் மோட்டார்களைக் கூடப் பார்க்காமல் கடந்து செல்ல முயன்றிருக்கிறன். ஏதோ சந்தேகித்து ஜவான் பின் தொடர்ந்திருக்கிறன். உடனே தக்ஷிணாமூர்த்தி எதிரே யிருந்த அமர்ஜோதி கபேக்குள் புகுந்துவிட்டானும். அந்த ஜவானுக்கு கோர்ட்டில் வேறு அவசர வேலை இருந்ததால் அவன் தக்ஷிணாமூர்த்தியை அதற்குமேல் பின் தொடரவில்லை.''

வேலைக்கார லக்ஷ்மி வெளியிட்ட தகவல் நினைவுக்கு வந்தது. மெள்ள மெள்ள தக்ஷிணாமூர்த்தி என் சந்தேகத்திற்குப் பாத்திரமாகிறன்.

''ப்ரதர்......என்ன, பதிலில்லையே.'' என்று கேட்டார் நாயர்.

''பாய். அடித்து விட்ட ஆணிபோல் இங்குதான் நிற்கிறேன். ஆனால் இப்போது நான் அந்த அமர்

ஜோதிக்குப் போகபே கிறேன்" என்று சொல்லி விட்டு ரிஸீவரை வைத்தேன். டெலிபோன் பெட்டியிலிருந்து வெளிவந்து, வியர்வையைத் துடைத்துக் கொண்டு. லாம்ப்ரெட்டாவில் ஏறி அமர்ஜோதி கபேக்கு விரைந்தேன்.

பெயர் பெரிதாயிருந்ததே தவிர ஹோட்டல் சிறியதுதான். ஒரு சின்ன மேஜைக்குப் பின்னால் உட்கார்ந்து கொண்டிருந்த முதலாளி என்னைப் பார்த்ததும் நாற்காலியைப் பின்னால் தள்ளிக் கொண்டு எழுந்து வரவேற்றார்.

எல்லா நாற்காலிகளும் காலியாயிருந்தன. ஒன்றில் உட்கார்ந்தேன்.

"என்ன வேண்டும் ஸார்?" என்று முதலாளியே வந்து கேட்டார்.

ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தேன். "இன்று பகல் சுமார் 1-மணிக்கு ஓர் ஆசாமி இங்கே வந்தானா?" என்று கேட்டேன்.

"ஓர் ஆசாமி என்ன ஸார், பல பேர் வந்தார்கள். பகல் வேளையில் இங்கு நல்ல கூட்டம் இருக்கும் ஸார். பேஷான காப்பி இங்கே கிடைக்கும், ஸார்" என்றார் முதலாளி.

"நான் குறிப்பிடும் ஆசாமி பயந்துபோய் பரபரப்புடன் வந்திருப்பான்."

"ஓ......அந்த ஆளா? அவர் இங்கு பல முறைகள் வந்திருக்கிறார், ஸார். இன்று அவர் பரபரப்பாகத்தான் காணப்பட்டார். நானேதான் காப்பி கொண்டு வைத்தேன். அவர் பக்கத்தில் நின்று கொண்டிருந்தேன். டம்ளரை எடுத்தார். அது அவர் கையிலிருந்து தவறி விழுந்து சட்டையை நனைத்துவிட்டது. மறுபடி ஒரு முறை காப்பி கொண்டு வந்து கொடுத்தேன்."

"இரண்டு காப்பிக்குப் பணம் வாங்கிக் கொண்டீர்களா?"

"ஆமாம், ஸார். சின்னக்கடை. விட்டுக் கொடுத்தால் கட்டாது."

"ஏன் அப்படிப் பதற்றமாயிருந்தான்? காரணம் கேட்டீர்களா?"

"கேட்டேன்......சொன்னார். தெருவைக் கடக்கும்போது ஒரு கார் விபத்திலிருந்து தெய்வாதீனமாகத் தப்பியிருக்கிறார்."

"அந்த ஆள் பெயரென்ன?"

"அது தெரியாது. பல தடவைகள் இங்கு வந்திருக்கிறார். பார்த்தால் உடனே அடையாளம் புரிந்து கொள்வேன்."

மேலே எதுவும் விசாரிக்காமல் வெளியேறி, தியாகராய நகருக்குப் புறப்பட்டேன்.

ஒரு சிறிய வீட்டு வாசலில் லாம்ப்ரெட்டாவை நிறுத்தினேன். இறங்கி முன்புறம் வராந்தாவிற்குச் சென்றேன். அங்கே ஒரு முதியவர் முன்னும் பின்னும் நடந்து கொண்டிருந்தார்.

அவரிடம் சென்று, "தக்ஷிணாமூர்த்தி எங்கே யிருக்கிறார்?" என்று கேட்டேன். இடது கோடியிலிருந்த ஓர் அறையைச் சுட்டிக் காட்டினார். நான் நடந்து சென்று, அந்த அறைக் கதவைத் தள்ளி, உள்ளே நுழைந்து, கதவை மறுபடி சப்தம் செய்யாமல் மூடினேன்.

உள்ளே ஒரு மின்சார விளக்கு எரிந்து கொண்டிருந்தது. இருபத்தைந்து வயது மதிப்பிடக்கூடிய ஓர் இளைஞன் ஒரு பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து, ஏதோ புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் அவசரமாக எழுந்தான். புத்தகம் நழுவி விழுந்தது.

"யார் நீங்கள்? என்ன வேண்டும்?" என்று கேட்டான். குரலில் அச்சம், ஆத்திரம், ஆச்சர்யம் எல்லாம் கலந்திருந்தன.

அவனருகில் சென்று நின்றேன். "ப்ரமீளா எல்லாம் சொல்லி விட்டாள். ஆகையால் உண்மையை ஒளிக்காமல் சொல்லிவிடு" என்றேன்.

"நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள்? ப்ரமீளா என்ன சொன்னாள்?"

"அந்தப் பாசாங்கெல்லாம் இந்தப் பரசுராமனிடத்தில் பலிக்காது. நீயும் ப்ரமீளாவும் சதி செய்து டாக்டர் கிருஷ்ணஸ்வாமியைக் கொன்று விட்டீர்கள்.

வேண்டு மென்றேதான் நொண்டிச் சாக்கு சொல்லி இன்று ப்ரமீளா லீவ் எடுத்தாள். நீ ஆஸ்பத்திரிக்குப் போய் டாக்டரைக் குத்திக் கொன்று விட்டாய்.''

தக்ஷிணுமூர்த்தியின் கண்கள் சினத்தால் சிவந்தன.

''நீங்கள் இப்படி பேசுவது எனக்குப் பிடிக்கவில்லை, ஸார். இன்று நான் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்கு போகவில்லை. டாக்டர் இறந்து விட்ட செய்தியே இப்போது நீங்கள் சொல்லித்தான் எனக்குத் தெரியும்'' என்றான்.

''மிஸ்டர் அந்த வெள்ளைக்காக்காய் விவகாரமெல்லாம் வேண்டாம். நீ இன்று அங்கே போனுய். ப்ரமீளா வரவில்லை என்று சுந்தரம் சொன்ன பின்னும் திரும்பாமல் அங்கேயே பிசின் போட்டு ஒட்டினுற் போல நின்ருய்......''

தக்ஷிணுமூர்த்தி அந்த நாற்காலியில் 'தொப்'பென்று உட்கார்ந்தான். நான் எதிரில் போய் நின்று கொண்டேன்.

''நான் ஆஸ்பத்திரிக்குப் போனது உண்மைதான். ஆனுல் டாக்டரின் மரணத்திற்கும் எனக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை'' என்ருன் ஈன ஸ்வரத்தில்.

''பின் எதற்காக அங்கே போனுய்?'' என்று உறுமினேன்.

''ப்ரமீளாவைப் பார்க்க.''

''அவள் இல்லையென்று தெரிந்ததும் ஏன் திரும்பி விடவில்லை ?''

அவன் முகம் வாடியது. இமைகள் படபடத்தன. மூச்சு வேகமாக வந்தது.

''உண்மையைச் சொல்'' என்று கர்ஜித்தேன்.

''நான் உடனே திரும்பவில்லை. அது தவறுதான் என்று இப்போது தெரிகிறது. சந்தர்ப்பம் கிடைத்தால் டாக்டருடன் ஒரு வார்த்தை பேசலாம் என்று எண்ணினேன்.''

''எவ்வளவு நேரம் அங்கே யிருந்தாய் ?''

''சுமார் 12-45 வரை.''

"டாக்டருடன் பேசினுயா?"

"இல்லை...சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இன்னெரு தடவை பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பி விட்டேன்."

"அதனுல்தான் பயத்தால் வெடவெடத்துக் கொண்டு அமர்ஜோதி கபேக்குப் போனுயோ?"

தக்ஷிணுமூர்த்தியின் முகம் பேயறைந்தது போல வெளிறி விட்டது.

"ஸார். நான் எல்லாவற்றையும் சொல்லிவிடு கிறேன். நான் இப்போது சொல்வது சத்தியம். இதை நம்புங்கள்" என்ருன்.

"சொல். என்ன நடந்ததென்பதை நான் அறிவேன். நீ சரியாகச் சொல்கிருயா என்று பார்க்கலாம். ஆரம்பி" என்று மிரட்டினேன்.

"டாக்டருக்கு என் மீது நல்ல அபிப்பிராயமில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதை மாற்றத்தான் அவருடன் பேச விரும்பினேன். படியேறி இரண்டாம் மாடியிலிருந்து மூன்ரும் மாடிக்குப் போகும் படிக்கட்டில் பாதியில் நின்று கொண்டேன். அங்கேயிருந்து 2-ம் மாடியில் உள்ள டாக்டரின் அறைக்குப் போவோர் வருவோரை நன்ருகப் பார்க்கலாம்.

"சுமார் அரைமணி நேரம் அப்படியே நின்று கொண்டிருந்தேன். ஒரு பெண்மணி டாக்டரின் அறையிலிருந்து வெளிவந்து, தாழ்வாரத்தில் நடந்து, படிக்கட்டில் இறங்கிப் போனுள். அதே சமயம் லிப்டிலிருந்து இறங்கி ஒரு கனவான் டாக்டர் அறைக்குள் போனுர். சிறிது நேரத்தில் அவரும் வெளி வந்தார். பருமனுன ஆசாமி. சுருட்டை மயிர்; ஸ்டாலின் மீசை. அவர் கீழே இறங்கிப் போகும்போது நான் உள்ளே போகலாம் என்றிருந்தேன். இரண்டு படிகள் நான் இறங்கினேன். இன்னெருவர் டாக்டரின் அறையிலிருந்து செல்வதைப் பார்த்ததும் நின்றேன். அவரும் கீழே இறங்கிப் போனுர். அவர் என் பார்வையிலிருந்து மறையும் மட்டும் காத்திருந்துவிட்டு, நான் டாக்டரின் அறைக்குப் போனேன். எட்டிப் பார்த்தேன்.

டாக்டரைக் காணவில்லை. உள்ளே நுழைந்து அடுத்த அறைக்குள் பார்த்தேன். அங்கே டாக்டர் தரையில் கிடந்தார். கழுத்தில் கத்தி. நான் பயந்து, அறையிலிருந்து ஓட்டமாக ஓடிக் கீழே இறங்கிப் போய்விட்டேன். தெருவில் போய்ச் சற்று நிம்மதியாக ஒரு மூச்சு விடலா மென்றால் ஒரு ஜவான் என்னைப் பின் தொடர்வதைப் பார்த்தேன். அ ர ண் டு விட்டேன். அப்போதுதான் எதிரிலிருந்த ஹோட்டலுக்குள் புகுந்தேன்."

"நீ போகும்போது கீழே விஸிட்டர்கள் அறையில் யாரையாவது பார்த்தாயா?"

"இல்லை, ஸார்! யாருமில்லை."

"டாக்டரிடம் என்ன பேச விரும்பினாய்?"

"நான் இப்போது வேலையில்லாமல் இருக்கிறேன். ஆனால் இன்னும் இரண்டொரு நாளில் நிச்சயம் வேலை கிடைத்துவிடும். டாக்டர் என்னைப் பற்றி மிக மட்ட மான அபிப்பிராயம் கொண்டிருந்தாராம். அது நியாய மல்ல என்று எடுத்துச் சொல்லப் பிரியப்பட்டேன்."

"ப்ரமீளாவுக்குத் தந்தி கொடுத்தது நீதானே?"

"தந்தியா? எனக்கு எந்தத் தந்தி சமாசாரமும் தெரியாது."

தக்ஷிணாமூர்த்தி சொன்ன தகவல்களைக் கேட்டதும் உண்மையை அநேகமாக எட்டிப் பிடித்துவிட்டது போலத் தோன்றியது எனக்கு. ஒரு முறை அவனைத் துளைப்பது போலப் பார்த்துவிட்டு அங்கிருந்து வெளி யேறினேன்.

## 10

வானத்தில் தாரகைகள் கண் சிமிட்டிக் கொண் டிருந்தன. எனது லாம்ப்ரெட்டாவைக் குறிப் பிட்ட ஓர் இடத்தில் நிறுத்திவிட்டு நாங்கள் இருவரும் சுமார் ஒரு பர்லாங் தூரம் நடந்து சென்று அந்த வீட்டை யடைந்தோம். மாடியில் ஒரே ஒரு விளக்கு எரிந்து கொண்டிருப்பது தெரிந்தது. ஆனால் நாங்கள் நின்ற இடத்தில் நல்ல இருட்டு. நான் 'கேட்'டை

உள்ளே தள்ளிக் கொண்டு நுழைய விரும்பினேன். ஆனால் உட்புறம் பூட்டியிருந்ததால் நான் காம்பவுண்டுச் சுவரை ஏறிட்டுப் பார்த்தேன். கிட்டத்தட்ட ஐந்தடி உயரம் இருந்தது. இருவரும் அந்த வீட்டுக்குப் பக்கவாட்டில் நடந்து சென்றோம். ஓர் இடத்தில் நான் எழும்பிக் குதித்தேன், அந்த சுவரின் மேல் தளத்தில். என் கைகளைக் கொடுத்து அவனையும் சுவருக்கு மேல் தூக்கி நிறுத்தினேன். ஓசைப்படுத்தாமல் இரு திருடர்களைப்போல் தோட்டத்துக்குள் குதித்தோம். சற்று நின்று நாலாபக்கமும் உற்றுப் பார்த்தேன். அமைதி குடிகொண்டிருந்தது. மாடி அறை ஒன்றில் ஒரே ஒரு விளக்கு எரிந்து கொண்டிருப்பது தெரிந்தது. அறையில் எவ்வளவு பேர் இருந்தார்களோ தெரியாது ; ஆனால் அறையில் இருந்தவர்கள் இன்னும் தூங்கவில்லை என்பது நிச்சயம். அவன் என்ன செய்ய வேண்டும் என்பதை மெதுவாக காதுக்குள் சொன்னேன்.

விளக்கு எரிந்து கொண்டிருந்த அறைப் பக்கம் பார்த்தேன். சாளரக் கதவுகள் திறந்திருந்தன. ஜன்னலுக்கருகில் போக முடியுமானால் உள்ளே யார் யார் இருக்கிறார்கள் என்பதைக் கண்டுபிடித்து விடலாம். துப்பறியும் நாவல்களில் வருவது போல் ஏதாவது ஜலதாரைக் குழாய் சுவரில் இருக்கும், அதைப் பிடித்துக்கொண்டு மெதுவாக ஏறிச் செல்லலாம் என்று பார்த்தேன். இது போன்ற வசதியான குழாய்கள் கதைகளில் வருகின்றனவே தவிர வாழ்க்கையில் வருவதில்லை. அப்போது தான் அருகிலிருந்த ஒரு மாமரத்தின் மீது பார்வை படர்ந்தது. என் அதிர்ஷ்டமே அதை வளர்த்துவிட்டது போல ஒரு கிளை அந்த ஜன்னல்வரை வளைந்து நின்றது. நான் என் பூட்ஸைக் கழற்றிவிட்டு மரத்தில் ஏறினேன். அவன் என்னைப் பின் பற்றினான். அந்தக் கிளையில் வெகு ஜாக்கிரதையாக ஏறினோம். ஜன்னலருகில் இருந்த அதன் கோடிக்குச் சென்றதும் எங்கள் பளு காரணமாகக் கிளை மேலும் கீழும் ஆட ஆரம்பித்தது. நான் மூச்சு விடுவதைக்கூட அடக்கிக் கொண்டேன். அவனும் அப்படியே ஆமை போல் உடலைச் சுருக்கிக் கொண்டான். சில நிமிஷங்களில் கிளையின் ஆட்டம் நின்றது. உள்ளே இரண்டு பேர் மட்டுமே இருப்பது

நன்ருகத் தெரிந்தது. கட்டிலில் ஒருவர் உட்கார்ந் திருந்தார். ஒரு பெண்மணி அறையில் மேலும் கீழும் நடந்து கொண்டே அவ்வப்பொழுது அவரிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாள். என்னுடன் கூட வந்தவன் என் காதுகளில் படும்படி மெதுவாகச் சொன்னுன்: "ஆமாம்...அவள்தான்...சந்தேகமில்லே."

இருவரும் சர்வ ஜாக்கிரதையாக மரத்திலிருந்து இறங்கினேம். நான் பூட்ஸை மாட்டிக்கொண்டேன். ஓசைப் படாமல் சுவர் ஏறித் தெருவில் குதித்து லாம்ப்ரெட்டாவை நோக்கி நடந்தேன்.

வழியில் அவனே இறக்கி விட்டேன். நான் அப்படியே 'தினச்செய்தி' காரியாலயத்திற்குப் போனேன். திலகம் இருந்தாள். அவளுக்கு அன்று இரவு ட்யூடியாம். அவள் அங்கு ஓர் உதவி ஆசிரியை.

"பரசுராமா? வாருங்கள், ஏது இப்படி அத்தி பூத்தது போல்" என்று கூறி வரவேற்ருள்.

"உங்களால் ஒரு காரியம் ஆகவேண்டும்" என்றேன்.

"என்னுலா? அதிசயமாக இருக்கிறதே!"

"உங்களால்தான் முடியும்...உங்கள் பத்திரிகை யின் சில பழைய பிரதிகள் வேண்டும்."

"பழைய பிரதி என்ருல் இரண்டு மூன்று மாதங் களுக்கு முந்தினவையா?"

"பதினேந்து வருஷங்களுக்கு முன் பிரசுரமான பிரதிகள் தேவை" என்றேன்.

"அப்படியானுல் தயவுசெய்து நாளேக் காலே பத்து மணிக்கு வாருங்கள். ஆசிரியரிடம் ஒரு வார்த்தை சொல்லி விட்டு எடுத்துத் தருகிறேன்."

"நாளேக் காலே வரை தாமதிக்க முடியுமானுல் நான் இப்போது இப்படி அர்த்த ராத்திரிப் பிசாசுபோல் ஓடிவருவேனு? இப்போதே வேண்டும். எனக்காக நீங்கள் எதுவும் செய்வீர்கள் என்று நம்பி வந்திருக் கிறேன்."

"ஆசிரியருக்குத் தெரிந்தால் என்ன சொல்வாரோ என்றுதான் யோசிக்கிறேன். சரி......" என்று கூறிக் கொண்டே பக்கத்திலிருந்த ஓர் அறைக்குள் நுழைந்

தாள் திலகம். ஒரு பீரோவைத் திறந்தாள். பைண்ட் செய்யப்பட்ட பெரிய 'வால்யூம்'களில் சிலவற்றை எடுத்து மேஜை மீது வைத்தாள். உடனேயே அவற்றைப் புரட்டுவதில் முனைந்து திலகத்தையே மறந்து விட்டேன். நான் பார்க்க விரும்பிய சேதியைத் தேடி அந்தப் பழைய பிரதிகளைப் புரட்டினேன். கடைசியில் அந்த செய்தி அகப்பட்டுவிட்டது. அப்படியே அதைப் பிரதி எடுத்துக் கொண்டு, நாற்காலியிலிருந்து குதூகலத்துடன் எழுந்தேன். முன் அறைக்கு வந்து திலகத்துக்கு வந்தனம் தெரிவித்துவிட்டு வெளியேறினேன்.

தெருக்களில் ஜன நடமாட்டமே இல்லை. ஆனால் என் மனத்தில் மட்டும் எண்ணங்கள் கட்டறுத்துக் கொண்டு ஓடின. சரியாகப் பதினாறு வருஷங்களுக்கு முன் அந்த சம்பவம் நடந்தது என்பதைக் கண்டு பிடித்து விட்டேன். இனி நான் ஏதும் மலைகளைத் தாண்டவோ கடல்களைக் கடக்கவோ வேண்டாம், உண்மை என்ற இரத்தினத்தை எடுத்து வர. என் விசாரணைகள் பலன் அளித்து விட்டன. மனக் களிப்புடனேயே லாம்ப்ரெட்டாவை ஓட்டினேன்.

ராம்லால் மருந்துக் கடை முன் அதை நிறுத்தி விட்டு, இன்ஸ்பெக்டர் நாயருக்கு டெலிபோன் செய்தேன்.

"ஹலோ" என்றது நாயரின் குரல் மறு முனையிலிருந்து.

"நாயர் பாய்; பரசுராம் பேசுகிறேன்" என்று அறிவித்துக் கொண்டேன் உற்சாகமாக.

"ப்ரதர், உங்களுக்கு என்ன நேர்ந்தது? உண்மையைச் சொல்கிறேன், நான் கொலைகள் பற்றிய புலன் விசாரணையை நிறுத்திவிட்டு எல்லா ஜவான்களையும் உங்களைத் தேடிவர அனுப்பித்து விட்டேன்" என்றார் நாயர் சிரித்துக்கொண்டு.

"அதுவும் ஒரு நல்ல காரியம்தான் நாயர் பாய். நான் குற்றவாளியைத் தேடித் திரிகிறேன். நீங்கள் என்னைத் தேடி ஜவான்களை அனுப்புகிறீர்கள். ஜவான்கள் என்னைக் கண்டு பிடிப்பதற்கும், நான் குற்றவாளி

யைச் சுட்டிக் காட்டுவதற்கும் நேரம் ஒத்துக் கொண்டால் அவர்கள் அப்படியே குற்றவாளியை உங்கள் முன் கொண்டு நிறுத்தி விடலாம். உண்மையிலே நீங்களெல்லாம் அற்புதமான யோசனைகளோடுதான் காரியங்கள் செய்கிறீர்கள்" என்று விமர்சித்தேன்.

"சரி ப்ரதர். நீங்கள் ஏதாவது கண்டு பிடித்தீர்களா?"

"எல்லாவற்றையும் கண்டுபிடித்து விட்டேன். ஆரம்பத்தில் ஒரே புதிராகத்தான் இருந்தது. இப்போது தெரிகிறது மூன்று கொலைகளையும் ஒரே ஆசாமி நிகழ்த்தி விட்டாரென்று."

"அப்படியானால் யார் அந்த ஆசாமி, சொல்லுங்கள்!"

"நாயர், உடனே உங்கள் ஜீப்பில் புறப்பட்டு ஆவடிக்குச் செல்லுங்கள். அங்கு முத்தம்மாள் தெருவில், 39-ம் நம்பர் வீட்டிலுள்ள இரண்டு பேரையும் கைது செய்து ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்லுங்கள்!"

"யார் யாரை அரெஸ்ட் செய்ய வேண்டும் ப்ரதர்?"

"ராவ்சாஹிப் கோவிந்தனையும் அவரது அருமைக் காதலி—இதுவரை வேலைக்காரி போல் நடித்து வந்த—வனஜாவையும்."

இன்ஸ்பெக்டர் நாயர் வியப்பு மேலிட்ட குரலில் "ப்ரதர்......ப்ரதர்" என்றார்.

அவரைப் பேச விடாமல் இடைமறித்து, "ப்ரதருமில்லை, ஸிஸ்டருமில்லை. நான் ரொம்பவும் களைத்துப் போயிருக்கிறேன். பாருவை மறந்தே போய்விட்டேன். சாப்பாட்டுடன் காத்திருப்பாள். நான் சொன்னபடி தயவுசெய்து ஆவடி போய் அவர்களைக் கைது செய்யுங்கள். காலையில் பேசலாம்" என்று சொல்லிவிட்டு ரிஸீவரை வைத்து விட்டேன்.

# 11

மறுநாள் காலை 8-மணிக்கு நான் உடுப்பி வனிதா பவனில் அமர்ந்திருந்தேன். அங்கு நான் வந்து அரைமணிக்கு மேலாகி விட்டது. சரியாக 7-30-க்கு வருவதாகக் காலையில் இன்ஸ்பெக்டர் நாயர் வாக்களித்திருந்தார். இன்னும் காணோம்.

இன்னும் நாலு இட்லிக்கு 'ஆர்டர்' கொடுத்தேன். இதுவரை மொத்தம் நாலு இட்லி, ஒரு முறுகல் தோசை, ஒரு வடை சாப்பிட்டாகிவிட்டது. உடுப்பி வனிதாபவன் இட்லி சட்னி வெகு பிரசித்தி பெற்றவை என்பதை இங்கு மறக்காமல் சொல்ல விரும்புகிறேன். ஆவி பறக்கும் இட்லிகளாகக் கொண்டு வந்தான் ஸர்வர் சிங்காரம். எடுத்து ஒரு விள்ளலை வாய்க்குள் போட்டேன், நாயர் வந்துவிட்டார்.

"மன்னித்துக் கொள்ளுங்கள் ப்ரதர்" என்று கூறிக்கொண்டே எதிரிலிருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார்.

இந்த வருஷம் பிறந்ததிலிருந்தே நாயரை நூறு தடவைகளுக்குமேல் மன்னித்திருக்கிறேன் காலதாமதமாய் வரும் குற்ற விசாரணையில். காப்பிக்குச் சொல்லிவிட்டு, டம்ளரிலிருந்த ஐஸ் வாட்டரைக் காலிசெய்தேன். ஒரு சிகரெட்டைப் பற்றவைத்தேன். வயிறு நிறைந்திருக்கும்போது புகையை உறிஞ்சினால் வேறு உலகத்துக்கே போவதுபோல் சுகம் மிஞ்சுகிறது. நாயரிடம் கேட்டேன்.

"பாய்; அவர்களை அரெஸ்ட் செய்தாயிற்று அல்லவா?"

"செய்துவிட்டேன் ப்ரதர். அந்தத் தவறை நினைத்துத் தான் வருந்திக் கொண்டிருக்கிறேன். உங்கள் விசாரணையிலோ அல்லது அனுமானத்திலோ ஏதோ பெரிய பிசகு நேர்ந்திருக்கிறது."

"என்ன? பரசுராம் பிசகு செய்தாளு?"— இப்படிக் கேட்டுவிட்டு காப்பியை எடுத்து, ஸாஸரை உயர்த்திக் குடிக்கலானேன்.

"ப்ரதர், கோவிந்தன் சாதாரண மனிதரல்ல. லட்சாதிபதி. இத்தகைய ஒருவர்மீது நடவடிக்கை எடுக்கு முன் நாம் எல்லா உண்மைகளையும் சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும். திட்டத்தை ஒரு விவரம் விடாமல் எண்ணத்தில் உருவாக்கிக் கொண்டு செயலில் இறங்க வேண்டும்."

"நீங்கள் கோவிந்தனைக் கண்டு ரொம்பவும் பயப்படுகிறீர்கள்."

"நான் பயப்படுகிறேனு? நன்ருய்ச் சொன்னீர்கள். மந்திரி சபை வரையில் இதை எடுத்துச் செல்வதாக அவர்தான் பயமுறுத்துகிருர். 'வாரண்ட் கூட இல்லாமல் இப்படி நட்ட நடுநிசியில் தன்னையும், தன் பணியாளையும் கைது செய்தது தவறு என்று வாதிக்கிருர். மான நஷ்ட தாவாப் போடுவதாகச் சொல்கிருர். இதையெல்லாம் கேட்டதும் தான் எனக்குச் சந்தேகமாகி விட்டது."

"நாயர் பாய். பயப்படாதீர்கள். இந்த மூன்று கொலைகளையும் செய்தது ராவ்சாஹிப் கோவிந்தன் தான். சில சமயம் இப்படிப் படுகொலைகளைச் செய்பவர்கள் சமூகத்தில் 'பெரிய மனிதர்கள்' என்ற பெயரில் உலவுபவர்களாய் இருக்கிருர்கள். அவர்களது பெரிய மனிதத்தன்மையைக் கண்டு பயந்தால் அல்லது தயங்கினுல் நாம் கடமையில் தவறியவர்களாவோம். ஒன்று சொல்கிறேன்: உண்மையை நிலைநிறுத்த நாம் முயன்ருேமானுல் உடலில் சிறிய புண்கூட வராமல் தீக்குளித்து மீளலாம்."

"கோவிந்தன் இந்தக் கொலைகளைச் செய்தார் என்று எப்படி நிரூபிப்பீர்கள்?"

சிகரெட்டை ஒருமுறை ஆழ்ந்து உறிஞ்சினேன். கப்பையும் ஸாஸரையும் ஓரத்துக்கு ஒதுக்கினேன். பேச ஆரம்பித்தேன்.

"நாயர் பாய்; பதினுறு வருஷங்களுக்கு முன் பிரசுரமான 'தினச் செய்தி'யில் ஒரு கொலை பற்றிய

செய்தி வந்திருக்கிறது. அதைப் படித்துப் பார்த்தீர்களானால் அப்போது நடந்த ஒரு கொலையைபற்றி அறியலாம். எல்லாம் பழங்கதை. சொல்கிறேன். அதைக் கேட்டதும் உங்களுக்கு உண்மை புலப்படும்.

"வனஜா, பாரிஜாதம் என்ற இரண்டு யுவதிகள் ஒரு நாடகக் கம்பெனியில் நடிகைகள். அந்தக் கம்பெனியின் மானேஜர் காசிநாதன். அவன் வனஜாவைக் காதலித்தான். வனஜாவும் அவனை நேசித்தாள். கல்யாணம் நடைபெறுமுன் அந்தக் கம்பெனி நாடகங்களில் கதாநாயகன் வேஷம் போடுவதற்காக சேகர் என்ற ஓர் இளைஞனைத் தேர்ந்தெடுத்தார்கள். நாட்கள் செல்லச்செல்ல வனஜாவின் மனத்தில் ஒரு சலனம் ஏற்பட்டது. நீர் நிம்மதியாக இருக்கும் ஏரியில் ஒரு கல்லைச் சுழற்றிப் போட்டால் ஏற்படுவது போன்ற சலனம். சேகர் வனஜாவிடம் பரிவு காட்டினான். வனஜாவோ நாளுக்கு நாள் காசிநாதனைவிட்டு விலகி சேகரிடம் தன் நெஞ்சத்தை அடிமைப்படுத்தினாள். அப்போது ஒரு நாள் இரவில் சேகர் கொலை செய்யப்பட்டு அவன் அறையில் பிணமாகக் கிடந்தான். வனஜாவோ காசிநாதன் கொலை செய்யத் துணிந்திருக்க மாட்டான் என்றே நம்பினாள். சேகர் மறைந்ததும் அவள் நேசம் மீண்டும் காசிநாதன்மீது திரும்பியது.

"சேகரைக் காசிநாதன்தான் கொலை செய்திருக்க வேண்டும் என்ற சந்தேகத்தில் போலீஸார் காசிநாதனைக் கைது செய்து அழைத்துச் சென்றார்கள். இரண்டு ஜவான்கள் அவனை ஸ்டேஷனுக்கு அழைத்துச் செல்லும்போது அவர்களில் ஒருவனைக் கொன்றுவிட்டு மற்றவனைப் படுகாயப்படுத்திவிட்டுக் காசிநாதன் தப்பி ஓடினான். வனஜாவும் மாயமாய் மறைந்தாள். இரண்டு வருஷங்கள் சல்லடை போட்டுச் சலித்த பின் போலீஸார் முயற்சியைக் கைவிட்டார்கள்.

"இந்த விவரமெல்லாம் பாரிஜாதத்திற்குத் தெரியும். கொஞ்ச நாளில் நாடகக் கம்பெனி மூடப் பட்டது. அவள் கல்கத்தா போய்ச் சேர்ந்தாள்.

"அப்போது தப்பி ஓடிய காசிநாதன் தான் இன்று ராவ்சாஹிப் கோவிந்தன்! நாலு வருஷங்கள் தலைமறைவாக இருந்தபின் இங்கு வந்தான். கோவிந்தன் என்ற பெயரில் ராஜாராம் செட்டி கம்பெனியில் வேலைக்கு அமர்ந்தான். திறமையால் அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமானான். அவரது ஒரே பெண் சாவித்திரி அவன் மேல் ப்ரேமை கொண்டாள். ஒருநாள் இருவர் கைகளையும் இணைத்துவிட்டு ராஜாராம் செட்டி உயிர் துறந்தார். கோவிந்தனுக்கும் சாவித்திரிக்கும் கல்யாணம் நடந்தது. அத்துடன் அவன் வாழ்க்கையின் போக்கே மாறியது. பெரிய தொழில் பிரமுகனானான். நல்ல மூளை. புதிய புதிய யோசனைகள் செய்து தொழிலை வளர்த்தான். பணம் குவிந்தது.

"சாவித்திரி மீது காதல் பொங்கி வழிவதைப் போல் நடந்து கொண்ட கோவிந்தன் மனம் உண்மையில் வனஜாமீது லயித்திருந்தது. ஆவடியில் ஒரு வீட்டைக் கட்டி வேலைக்காரி என்ற வேஷத்தில் வனஜாவை அங்கு கொண்டு வைத்தான்.

"ஐந்து வருஷங்களுக்குமுன் சாவித்திரி இறந்ததும் அவன் வனஜாவை மணந்து கொண்டிருப்பான் ஆனால் முதல் மனைவி இறந்ததும் அவள் நினைவிலும் அது தந்த துயரத்திலுமே மூழ்கித் தனியே வாழும் உத்தம குணசீலனாய்ச் சமூகத்தில் பெயர் எடுக்க வேண்டும் என்று ஒரு விருப்பம். தவிர, கல்யாணம் என்று பகிரங்கமாய்ச் செய்து கொண்டு வனஜாவை வெளிக்கொண்டுவர பயமும்கூட. சனி ஞாயிறுகளில் தவறாமல் ஆவடி போய் வருவதோடு நிறுத்திக் கொண்டான்.

"சென்ற உலக மஹாயுத்தத்தின் போது வெள்ளை யர் அரசாங்கத்திற்கு நிறையப் பணம் கொடுத்துப் பெற்றுக் கொண்ட விருதுதான் இந்த ராவ்சாஹிப் பட்டம். கோவிந்தனைப் பெரிய மனிதனென்று சமூகம் ஏற்றுக் கொண்டது. பதினறு வருஷங்களுக்கு முன் நடந்த படுகொலைகளை யார் நினைத்துப் பார்த்தார்கள்? இனிமேல் தன்னை அடையாளம் கண்டு கொண்டு, 'இதோ காசிநாதன், என்று சொல்ல யாருமில்லை என்ற திருப்தியில் அவன் மூழ்கியிருந்தான். அப்போது தான் விதி அனுப்பிய தூதுபோல பாரிஜாதம் அவனை டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் ஆஸ்பத்திரியில் பார்த்து மலைத்து நின்ருள். கோவிந்தனின் மருமகளிடம் பாரிஜாதம் அந்தரங்கமாகப் பல கேள்விகள் கேட்டு அது காசிநாதன் தான் என்பதைத் தனக்குள் ஊர்ஜிதம் செய்து கொண்டாள். அந்த மருமகள் நர்கீஸ் மாமாவிடம் எல்லாவற்றையும் தெரிவித்தாள். உடனேயே பாரிஜாதத்திற்கு அபாயம் நெருங்கிவிட்டது.

"பாரிஜாதம் கல்கத்தாவிலிருந்து வரும்போது அதே பெட்டியில் சொக்கநாதனும் வந்தார். வழித்துணையாக இருவரும் ஏதேதோ பேசிக் கொண்டு வந்தார்கள். சென்னைக்கு வந்தபின் ஒருநாள் இரவு சொக்கநாதன் பாரிஜாதத்திற்கு விருந்தளித்தார். அப்போது நிச்சயம் அவர் பேச்சுப் போக்கில் சாமர்த்தியமாக கோவிந்தனின் கடந்த கால வாழ்க்கையைப் பற்றியச் சில தகவல்களைப் பாரிஜாதத்திடமிருந்து அறிந்திருப்பார். இப்படி ஒரு ரெயில் சிநேகிதத்தால் லட்சம் லட்சமாகப் பணம் பிடுங்கக்கூடிய தகவல் கிட்டியதே யென்று அவர் குதூகலித்திருப்பார். மறுநாளே அவர் ராவ்சாஹிப் கோவிந்தனுக்கு போன் செய்து வழக்கமான பயமுறுத்தல் வித்தையைக் காட்டியிருக்கிருர்.

"கோவிந்தனை கிலி பற்றிக்கொண்டது. அப்புறம் ஒரு நாள் பாரிஜாதம் அவரைச் சந்திக்க அவருடைய வீட்டுக்குப் போயிருக்கிருள். பாரிஜாதம் மிக நல்லவள். கோவிந்தனுக்கு இப்போது ஏதும் கெடுதல் செய்ய வேண்டுமென்று அவள் கனவிலும் கருதவில்லை. விதி வசத்தால் கோவிந்தன் யாரென்பதைக் கண்டு கொண்டு ஏதோ விஷ வேளையில் சில தகவல்களை சொக்கநாதனிடம் வெளியிட்டு விட்டாள். அதுவே அவளுக்கு யமனுயிற்று. இந்த இரண்டு பேரையும் தீர்த்துக் கட்டிவிட்டாலன்றித் தனக்கு நிம்மதியில்லை என்று தீர்மானித்தார் கோவிந்தன்."

சற்று நிறுத்தினேன். நாயர் வைத்த விழி வாங்காது என்னையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஏதோ சேவை செய்வதற்காக அடிக்கடி பாரி ஜாதம் ஐமுனுபாய் பில்டிங்ஸ் செல்வதை யறிந்தார் கோவிந்தன்.

"வனஜா வசந்தம்மா என்ற பெயரில் உடனே ஐமுனுபாய் பில்டிங்ஸில் அறை அமர்த்திக் கொண்டாள். பாரிஜாதம் அவளை ஒருமுறை சந்திக்க நேர்ந்தது; பழைய நட்பைப் பாராட்டினுள். சிநேகிதி வனஜாவைப் பார்க்க பாரிஜாதம் அங்கு போயிருக்கிருள். அன்று இரவே வசந்தம்மாவும் கோவிந்தனும் சேர்ந்து பாரி ஜாதத்துக்கு விஷம் கொடுத்துக் கொன்று விட்டார் கள். அதற்குப் பிறகு மிகத் தந்திரமாக ஒரு நாடகம் நடத்தியிருக்கிருர்கள். பாரிஜாதத்தின் உயிரற்ற உடலில் வசந்தம்மாளின் புடவை, ஜாக்கெட் முதலியவற்றை அணிவித்து முகத்தை அடையாளம் புரியாதபடி சிதைத்து விட்டனர். இருவரும் அறையைப் பூட்டிக் கொண்டு ஓடிவிட்டார்கள்."

"எங்கே?" என்ருர் நாயர்.

"கோவிந்தன் தமது மாளிகைக்குப் போனுர். பாரிஜாதம் போல் தன்னை 'மேக்கப்' செய்து கொண்டு

வசந்தம்மாள் என்னும் வனஜா மீனுக்ஷி ஹோட்டலுக்குப் போனுள். நடிப்புத் திறமை உள்ளவளல்லவா? அங்கு யாரும் இந்த ஆள் மாருட்டத்தைக் கவனிக்கவில்லை. பாரிஜாதம் உயிருடனிருக்கிருள் என்று எல்லோரையும் நம்ப வைக்கவேண்டிய அவசியமிருந்ததாலேயே அவள் அப்படிச் செய்தாள். பாரிஜாதம் என்ற பெயரில் அவள் கோவிந்தனுக்கு இன்னெரு உதவி செய்யவேண்டியிருந்தது.

"நேற்றுப் பகல் 12 மணிக்கு ராவ்சாஹிப் கோவிந்தன் லிப்ஃடில் ஏறி டாக்டர் கிருஷ்ணஸ்வாமியின் அறைக்குப் போனுர். அப்போது போலி பாரிஜாதம் விஸிட்டர்கள் அறையில் உட்கார்ந்திருந்தாள். கோவிந்தன் டாக்டரைக் கொலை செய்துவிட்டுத் தானே டாக்டர் போல் நின்று கொண்டு மின்சார மணியை அடித்தான். சுந்தரம் உடனே அடுத்தபடியாக ஜாபிதாவில் உள்ளபடி பாரிஜாதத்தை (அதாவது வனஜாவை) மேலே கொண்டு விட்டான். 12-30க்கு மறுபடி மணி அடித்தது. இப்போது சொக்கநாதன் மாடிக்குப் போனுர். அப்போது போலி பாரிஜாதம் படியிறங்கிக் கீழே வந்தாள். விஸிட்டர்கள் அறையில் தங்கியிருந்த பாஞ்சாலி—சுவாமிநாதனை அவளுக்குத் தெரியவில்லை. 'மரியாதைக்குக்கூடப் புன்னகை பூக்கவில்லையே இந்தப் பாரிஜாதம். பலே ராங்கிக்காரி' என்று பாஞ்சாலி—சுவாமிநாதனுக்குக் கோபம் வந்தது. இதை அவள் என்னிடம் கூறிய போதுதான் ஒரு வேளை படியிறங்கி வந்தது உண்மையில் பாரிஜாதம் அல்லவோ என்று எனக்குத் தோன்றியது.

"சொக்கநாதன் டாக்டர் கிருஷ்ணஸ்வாமியை அதற்கு முன் பார்த்ததில்லை. கோவிந்தனையும் பார்த்ததில்லை. எனவே கோவிந்தன் டாக்டர் போல் நடித்து விஷ மாத்திரையை உள்ளுக்குக் கொடுத்து அனுப்பி

விட்டான். இப்படி டாக்டராக நடிக்கும் சந்தர்ப்பத்திற் காகத்தான் கிருஷ்ணஸ்வாமியைக் கொலை செய்ய நேர்ந்தது.

"சொக்கநாதன் போனதும் சற்று நேரத்திற் கெல்லாம் கோவிந்தன் தனது உடைகளையே அணிந்து படியிறங்கிக் கீழே போனான். அப்போது அதிர்ஷ்டம் அவன் பக்கமிருந்தது. பாஞ்சாலி—சுவாமிநாதன் 'பாத்-ரூம்' போய்விட்டாள். சுந்தரம் ஏதோ சுவாரஸ்யமான நாவலில் அமிழ்ந்திருந்தான். ஆனால் கடவுள் இப்படி அக்ரமத்தை அனுமதிப்பதில்லை. கோவிந்தன் படியிறங்கிப் போவதை தக்ஷிணாமூர்த்தி பார்த்து விட்டான். இரண்டாம் மாடியிலிருந்து மூன்றும் மாடிக்குச் செல்லும் படிக்கட்டில் அவன் அப்போது நின்று கொண்டிருந்தான்."

"அவன் அங்கே அப்போது என்ன செய்து கொண்டிருந்தான்?" என்று சந்தேகத்தோடு கேட்டார் நாயர்.

"டாக்டருடன் சற்றுப் பேச ஒரு சந்தர்ப்பத்திற் காகக் காத்துக் கொண்டு நின்றான். இரண்டாம் மாடியில் டாக்டர் அறை, தாழ்வாரம் அவன் நின்ற இடத்தி லிருந்து, நன்றாய்த் தெரியும். போலி பாரிஜாதம் டாக்டர் அறையிலிருந்து போவதையும், அதன் முன் ஸ்டாலின் மீசை சொக்கநாதன் டாக்டர் அறைக்குள் செல்வதையும் அவன் பார்த்தான். சற்று நேரத்தில் மீசைக்காரர் வெளிவந்து படியிறங்கிப் போவதையும் பார்த்தான். டாக்டர் அறைக்குள் தான் போகலாமே என்று எண்ணி இரண்டு படிகள் இறங்கினான். அப் போது வேறு யாரோ ஒருவர் டாக்டர் அறைக்குள் ளிருந்து வெளிவந்து கீழே இறங்கிச் செல்வதைப் பார்த்ததும் அங்கேயே நின்று விட்டான். அவர் பார்வையிலிருந்து மறைந்த பின் டாக்டர் அறைக்குள்

சென்ற தக்ஷிணாமூர்த்திதான் டாக்டர் கொலை செய்யப் பட்டு விட்டதை முதலில் பார்த்தான். பயந்து ஓடி விட்டான். எதேச்சையாய் அங்குச் சென்ற ஜவானைப் பார்த்ததும் நடுங்கிப்போய் அமர்ஜோதி கபேயில் நுழைந்தான்.''

நான் நிறுத்தினேன்.

''ப்ரதர், ஜமுனா பாய் பில்டிங்ஸில் கிடந்த உடல் வசந்தம்மாளுடையது அல்ல என்று எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?'' என்று கேட்டார் நாயர்.

''அறையிலிருந்த எல்லோரும் உடல் மீதிருந்த ஆடைகளைப் பார்த்து 'இது வசந்தம்மாள்' என்று சாதித்தார்கள். ஆனால் வசந்தம்மாளின் துணிமணி களை விட்டுவைத்த கொலையாளி முகத்தை ஏன் அடையாளம் புரியாதபடி சிதைக்க வேண்டும் என்று எனக்குச் சந்தேகம் வந்தது. வசந்தம்மாள் இறந்து விட்டாள் என்று நம்பச் செய்ய யாரோ நிகழ்த்திய தந்திரம் இது என்று தோன்றியது. நேரே மீனாக்ஷி ஹோட்டலுக்குப் போனேன். அங்கே பாரிஜாதம் இல்லை. அறை பூட்டியிருந்தது. திறந்து கொண்டு உள்ளே போனேன். அங்கு கிடைத்த காகிதத் துணுக்குகளில் இரண்டு ஒன்றோடொன்று இணைந்து ஒரு முழுப்பக்கமாயிற்று. அது ஒரு பிரயாண அனுமதிப் பத்திரத்தின் முதல் பக்கம். மேலே பாரி ஜாதம் என்று பெயர் எழுதியிருந்தது. கழுத்திற்குச் சற்று கீழே ஒரு மச்சம் என்று அடையாளம் குறித் திருந்தது. உடனே மீண்டும் ஜமுனா பாய் பில்டிங்ஸுக்கு வந்தேன். அங்கு இருந்த உடலின் ஜாக்கெட்டைச் சற்று கீழே ஒதுக்கிக் கழுத்துப் பக்கம் பார்த்தே னல்லவா? இறந்ததுதான் நிஜ பாரிஜாதம் என்பது புலப்பட்டு விட்டது.

"அவள் இறந்து ஒரு முழு நாள் ஆகியிருக்கும் என்று டாக்டரின் அபிப்பிராயத்தை அறிந்து கொண்டேன். உடனே யோசனை வலுத்தது. நேற்று மாலையே இவள் இறந்து ஒரு நாள் ஆகிவிட்டதென்றால் நேற்றுப் பகல் பொழுதில் டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரிக்குப் போனது பாரிஜாதமல்ல என்று சொல்ல துப்பறியும் மூளையா தேவை? வசந்தம்மா இறந்தாளென்று நம்பவைத்து பாரிஜாதத்தைக் கொலை செய்திருப்பதால் வசந்தம்மாள்தான் பாரிஜாதம் வேஷம் தரித்து டாக்டர் வீட்டுக்குப் போயிருக்கிறாள் என்பது தெளிவாய்த் தெரிந்தது. டாக்டர் கிருஷ்ணஸ்வாமிக்கு பாரிஜாதத்தைத் தெரியும். ஆனால் அவர் இந்த வசந்தம்மாவை 'இது பாரிஜாதம் அல்ல' என்று கண்டு கொள்வதற்கு இடம் கொடுக்காதபடி கோவிந்தன்தான் அதற்கு முன்பே அங்கு போய் டாக்டரைத் தீர்த்து விட்டானே!"

"ஆகவே யோசனை செய்துதான் கோவிந்தனுக்கு அடுத்தபடி பாரிஜாதம் வரும்படி டாக்டரிடம் நேரம் நிச்சயித்துக் கொண்டிருக்கிறார்கள். அதற்கடுத்தபடி சொக்கநாதன் வந்ததுதான் ஆச்சர்யம்" என்றார் நாயர்.

"ஆச்சர்யமல்ல. அதுதான் மாற்ற முடியாத விதி. பாரிஜாதம்போல் நடித்த வனஜா படியிறங்கி வந்தாள். மணி ஒலித்தது. சொக்கநாதன் மேலே போனார். யாருக்கும் டாக்டருக்கு ஏதும் நடந்திருப்பதாகச் சந்தேகம் மூளவே இடமில்லை. நேற்றுப் பகலில் நான் பார்த்ததும் இந்த போலி பாரிஜாதத்தைத்தான். டாக்டர் கிருஷ்ணஸ்வாமியைத் தான் பார்த்ததாகவும், பேசியதாகவும் என்னிடமே சொன்னாள். நானும் அப்போது நம்பத்தான் வேண்டியிருந்தது. அதன்பின் தான் அவள் ஜமுனா பாய் பில்டிங்ஸிலிருந்து நேற்று

மாலே எனக்கு 'பாரிஜாதம்' என்று கூறி போன் செய்து விட்டு மறைந்து விட்டாள். வனஜா என்ற வசந்தம் மாளின் திருப்பணி வெற்றிகரமாக நடந்தேறிவிட்டது. அந்தக் காகிதத் துணுக்குகள் கிடைத்து அடையாளக் குறி தெரிந்திராவிட்டால் நானும் ஜமுனு பாய் பில்டிங்ஸ் அறையில் இறந்து கிடந்தது வசந்தம்மாள் என்று தான் முடிவு கட்ட வேண்டியிருந்திருக்கும். பாரிஜாதம் ஆஸ்பத்திரிக்குப் போனுள்; டாக்டர் இறந்தார். சொக்கநாதனுடன் பரிச்சயம் கொண்டிருந்தாள்; அவர் இறந்தார். வசந்தம்மாளின் அறைக்கு வந்தாள்; அவள் இறந்தாள். எனவே பாரிஜாதம் பெரிய கொலே காரி என்று முடிவு கட்டி போலீஸ் படை பூராவையும் அவளேப் பிடிக்க ஏவி யிருப்போம். ஏற்கனவே இறந்து மறைந்துவிட்ட பாரிஜாதத்தை எப்படி நாம் பிடிப் பது? ஆறு மாதம் தீவிர முயற்சி; அப்புறம் அசிரத்தை· கடைசியில் 'பை'லேக் கட்டி வைத்திருப்பீர்கள்'' என்று கூறி முடித்தேன்.

"வசந்தம்மாள் தான் வனஜா; வனஜாதான் வேலேக்காரி என்ற சாக்கில் ஆவடியில் இருந்தவள் என்பதை எப்படிக் கண்டு பிடித்தீர்கள், ப்ரதர்? தவிர 16 வருஷங்களுக்கு முன் வெளியான இந்தப் பத்திரிகைச் செய்தியைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் உங் களுக்கு எப்படி உண்டாயிற்று?" என்று வினவினுர் நாயர். மணியான கேள்விகள்!

விடை தந்தேன்: "மறந்து விட்டேன், பாய்! இப்போது சொல்கிறேன், கேளுங்கள். கேல்கர் பேசுவதைப்போல் ஒரு நாள் நர்ஸிடம் நான் டெலி போனில் பேசினேன். அப்போதுதான் பாரிஜாதம் ராவ்சாஹிப் கோவிந்தனே டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஆஸ்பத்திரியில் சந்தித்ததும், மலேத்து நின்ற தகவலும், பிறகு அவள் நர்ஸிடம், 'வனஜா சௌக்கியமா?'

என்று கேட்டதும் தெரிந்தது. எனவே கோவிந்த னுடன் வனஜாவுக்கு ஏதோ தொடர்பு உண்டு. அந்தத் தொடர்பு பாரிஜாதத்துக்குத் தெரியும் என்பதை ஊகிக்க முடிந்தது. 'மாமா ஆவடிக்குப் போயிருக் கிருர், அங்கே அவருக்கு ஒரு வேலைக்காரி யிருக்கிருள் கும்மாளம் போட' என்றும் நர்கீஸ் என்னை கேல்க ரென்று எண்ணிக் கொண்டு கூறினுள். வசந்தம்மாளைப் பார்க்க பாரிஜாதம் ஜமுனு பாய் பில்டிங்ஸ் சென்றுள் என்று தகவல் கிடைத்திருக்கிறது நமக்கு. வசந்தம் மாளின் அறையில் பாரிஜாதத்தின் சவம். இந்தச் சூழ்நிலையில் தான் வசந்தம்மா வனஜாவோ என்ற சந்தேகம் எனக்கு உதித்தது. நேற்று இரவு நான் ஜமுனு பாய் பில்டிங்ஸில் உள்ள வேலையாள் கந்தனை அழைத்துக் கொண்டு ஆவடி போயிருந்தேன். அந்த வீட்டில் ஓர் அறையில் கோவிந்தனும் ஒரு பெண்மணி யும் பேசிக் கொண்டிருந்தார்கள். அவள் தான் வசந்தம் மாள் என்று கந்தன் தீர்மானமாகக் கூறினுன். வசந்தம் மாள்தான் வனஜா என்று முடிவு கட்ட வேறென்ன சாட்சியம் தேவை? பதினைந்து வருஷங்களுக்கு முன் வனஜாவும் பாரிஜாதமும் சிநேகிதிகளாம்; இருவரும் நாடகங்களில் சேர்ந்து நடிப்பார்களாம். இப்படி நர்கீஸ் என்னிடம் கூறியிருந்தாள். ஆகவே பதினைந்து வரு ஷங்களுக்கு முன் பாரிஜாதம், வனஜா, கோவிந்தன் மூவரும் சம்பந்தப்பட்ட ஏதோ இரகசியம் நடந்திருக் கிறது; இப்போது அது வெளிவராமலிருக்க வனஜா வும் கோவிந்தனும் சேர்ந்து பாரிஜாதத்தைக் கொன்று விட்டனர் என்ற உண்மை தெளிவடைந்தது. கோவிந் தன் இந்த ஊருக்கு வந்து பன்னிரண்டு வருஷங்கள் ஆகின்றன. ஆவடிக்கு வேலைக்காரி வந்து பத்து வருஷங்கள் ஆகின்றன. ராஜாராம் செட்டியார் இறந்த பின் வந்திருக்கிருள். வனஜாவும் பாரிஜாதமும் சேர்ந்து நாடகங்களில் 15 வருஷங்களுக்கு முன் நடித்திருக்

கிருர்கள். இந்த விவரங்கள்தாம் பதினைந்து வருஷங்களுக்கு முன் ஏதாவது சுவாரஸ்யமான விஷயங்கள் நடந்திருக்குமென்று என்னை அனுமானிக்க வைத்தன; பழைய பத்திரிகைச் செய்தியைத் தேடிக் கண்டு பிடிக்க வைத்தன. தப்பியோடிய காசிநாதனின் படத்தை பத்திரிகையில் பார்த்தேன். உற்றுப் பார்க்கப் பார்க்க ராவ்சாஹிப் கோவிந்தன் அதில் நன்கு புலனுனன்!"

நாயர் பதில் பேசவில்லை.

"ஸார். தக்காளிக்காய் ஊத்தப்பம்—வெங்காய கொத்ஸு சூடாகப் போட்டிருக்கிறது. கொண்டு வரட்டுமா?" என்று கேட்டான் ஸர்வர் சிங்காரம்.

"கொண்டு வா...இரண்டு ப்ளேட். நாயர் பாய், உங்களுக்கு வேண்டாமென்ருல் நானே இரண்டு ப்ளேட்டையும் காலி செய்கிறேன். பயப்படாதீர்கள்" என்றேன்.

(Agatha Christie எழுதிய ஒரு துப்பறியும் நவீனத்தைப் படித்ததும் அந்த சிந்தனைப் பாதையில் எனது கற்பனை சென்று உருவாக்கிய கதை)

